# உமர்கய்யாம் பாடல்கள்

(ரூபயாத்)

*தமிழாக்கம் :*

தமிழ்ப் பேரறிஞர்
திரு. சாமி - சிதம்பரனார்.

*வெளியிடுவோர் :*

திருமதி. சிவகாமி - சிதம்பரனார்,
இலக்கிய நிலையம்,
சென்னை - 24.

*முதற் பதிப்பு: 1946*
*இரண்டாம் பதிப்பு: 1963*


விலை ரூ. 1—50

*வெளியிடுவோர்:*

திருமதி. சிவகாமி-சிதம்பரனார்
இலக்கிய நிலையம்,
9, சௌராஷ்டிர நகர் 7வது தெரு,
சென்னை - 24.

*விற்பனை உரிமை:*

என் சி பி எச் பிரைவேட் லிமிடெட்,
6, நல்லதம்பி செட்டி தெரு,
சென்னை - 2.

Printed at TAS Press, 1/25, Mookkathal St., Madras-7. Phone: 63012

# கவலையற்று வாழ்

## முன்னுரை

இன்பம்! இன்பம்' இன்பம்! ஆம்! இதுவே மக்கள் விரும்புவது. இதை விரும்பியே உலக மக்கள் உழைக்கின்றனர்: வாழ்கின்றனர். இன்பத்தில் அன்பற்ற எவரும் இவ்வுலகில் வாழ விரும்பார். மனித வாழ்வில் இன்பம் உண்டு. இன்பத்தைத் தேடிக்கொள்ளக்கூடிய சக்தி மக்களுக்கு உண்டு. இயற்கையை மாற்றி அமைத்துக்கொள்ளும் வலிமை மனிதனுக்கே சொந்தம். வேறு எவ்வுயிர்க்கும் இவ்வாற்றல் இல்லை. மற்ற உயிர்களைக் காட்டிலும் சிறப்பறிவு படைத்தவன் மனிதன் அன்றோ?

"எல்லா ஊர்களும் நம்முடைய ஊர்கள்; உலக மக்கள் எல்லோரும் நம்முடைய உறவினர். நமக்குத் தீமை வருவதும் பிறரால் அன்று; நன்மையுண்டாவதும் பிறரால் அன்று; நாமே தீமைக்கும் நன்மைக்கும் காரணம். நாம் துன்பமடைவதும் இன்பமடைவதும் அதைப்போல்தான்;" இது ஒரு பழந் தமிழ்ப் புலவர் கருத்து. இக்கருத்துடைய பாட்டு:—

யாதும் ஊரே யாவரும் கேளிர்
 தீதும் நன்றும் பிறர்தர வாரா
நோதலும் தணிதலும்
 அவற்றோர் அன்ன. (புறநானூறு)

இப்பாடல் மனித சக்தியைக் கண்ணாடிபோல் காட்டுகின்றதன்றோ. இத்தகைய ஆற்றல் படைத்த மக்கள் ஏன் தங்கள் வாழ்க்கையைப் பாழாக்கிக்கொள்ள வேண்டும்? இன்புற்று வாழ்வதற்கு வழிதேட வேண்டாமா!

மனித வாழ்க்கையே துன்பமுடையது; பிறப்பின்றி இருத்தலே இன்பமுடையது; என்பர் சிலர்.

"பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம்
பிறவார் உறுவது பெரும்பேர் இன்பம்"

என்பது போன்றவைகள் அத்தகையோர் கூற்றைக் காட்டுவன. இதை நாம் ஒப்புக்கொள்வதற்கில்லை. துன்பம் இன்றேல் இன்பம் ஏது? கசப்பின் சுவை தெரிந்தால் அன்றோ இனிப்பின் இயல்பு தெரியும்.

தன்னம்பிக்கையற்றவர்கள்தான் வாழ்க்கையைத் துன்பம் என்பர். உழைப்பில் — முயற்சியில் நம்பிக்கையற்றவர்களே வாழ்க்கையை வெறுப்பர். எல்லாம் வல்ல தன்மை மனிதனிடம் உண்டு என்பதை உணர்ந்தோர் வாழ்க்கையை வெறுக்கமாட்டார்.

பல மக்கள் எல்லா இன்பங்களும் பெற்று உயர்ந்த வாழ்க்கை வாழ்வதைப் பார்க்கின்றோம். கோடிக்கணக்கான மக்கள் பட்டினி கிடந்து சாவதையும் பார்க்கின்றோம். இந்த நிலை மாறவேண்டும். உலகில் பிறந்த எல்லா மக்களும் துன்பம் இன்றி வாழவேண்டும். இதில் கருத்து வேற்றுமையே இல்லை. பண்டும் இல்லை; இன்றும் இல்லை.

ஒருவன் துன்புறுவதும், பட்டினி கிடந்து மடிவதும் தலைவிதி; முன் பிறப்பில் செய்த தீவினை. ஒருவன் அளவுக்கு மேல் போக போக்கியங்கள் அநுபவிப்பதும் தலைவிதி; முன்செய்த நல்வினை என்று தன்னம்பிக்கையற்ற மக்கள் கூறிவிடுகின்றனர். இக்கூற்று பொருந்துமா?

திருவள்ளுவரைப்பற்றி உங்களுக்குத் தெரியும். கடவுள், மறுபிறப்பு, கர்மம், சுவர்க்கம், நரகம் எல்லாவற்றிலும் நம்பிக்கையுடையவர். அவர் கூறுகிறார், "பிச்சை எடுத்து உயிர் வாழும்படி உலகில் எந்த மனிதனும் படைக்கப்பட வில்லை. ஒருகால் பிச்சை புகுந்துதான் உயிர்வாழவேண்டும் என்று ஒருவன் படைக்கப்பட்டிருப்பானாயின், இந்த இழி வான உலகைப் படைத்தவன் அடியோடு அழிக" என்று வசைமொழியை வீசுகிறார் படைப்புத் தலைவன்மீது.

இரந்தும் உயிர்வாழ்தல்
　　வேண்டின் பரந்து
கெடுக உலகியற்றி யான்

இதுவே மேற்கூறிய கருத்தை விளக்கும் குறள்.

"இன்மை வேண்டின் இரவு எழுக"

துன்பம் வேண்டுமானால் பிச்சையெடுக்கத் தொடங்குக என்றார் ஒருவர். பிச்சையெடுப்பதைக் காட்டிலும் துன்ப வாழ்வு வேறில்லை என்பதே இவர் கருத்து. இதுதான் திருவள்ளுவர் கருத்தும்.

இதே கருத்தைப் பாரதியார், வேறு மொழியில் ஆவேசத்துடன் கூறிவிட்டார்.

"தனியொருவனுக்கு
　　உணவிலை யெனில் ஜகத்தினை
　அழித்திடுவோம்"

என்றார். இதுவன்றோ மனித சக்தி. எல்லா மக்களையும் வாழ்க்கையில் இன்பம் நுகரும்படி செய்யும் சக்தி மனித னுக்கு உண்டு. உலகத்தை அழிக்கும் சக்தியும் மனிதனுக்கு உண்டு என்று அன்று நம்பினார் பாரதியார். இன்று, அணுக்குண்டு இதை மெய்ப்பித்துவிட்டது. **அழிக்கும் கருவியைக் கொண்டு ஆக்க வேலைகள் பல செய்தல் கண்கூடு** ஆதலின், மனிதப் பிறப்பே துன்பம் உடையது என்ற சோர்வு மனப்பான்மையை அடியோடு தொலைப் போம்.

"யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்ருர் ஒருவர். எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே, அல்லாமல் வேறென்று அறியேன் என்ருர் மற்றொருவர். இக்கருத்து இன்று நேற்று எழுந்தது அன்று. மனித சமூகம் அறிவுபெற்ற நாள் முதல், எந்நாட்டிலும், எச்சமயத்தாரும், இக்கருத்தை வெளியிட்டு வந்திருக்கின்றனர்.

முன்னேர், மக்கள் மகிழ்ச்சியுடன் வாழ்வதற்கு அவ்வப்போது காட்டிய வழிகள் வெவ்வேருனவை. அவைகள் நிலையாக மனித சமூகத்தில் மகிழ்ச்சியை வளர்த்துவிடவில்லை. மனித வாழ்க்கையை என்றும் இன்பமுடையதாக்க இக்காலத்தினர் கண்ட முடிவு வேறு. முன்னேர், தருமம், பக்தி, கடவுள், நம்பிக்கை, பற்றின்மை, அன்பு, இரக்கம் ஆகிய சொற்களின் மூலம், ஏழை, பணக்காரன், உழைப்பாளி, சோம்பேறி எல்லோரும் அவரவர்கள் நிலையில் இருந்துகொண்டே இன்புற்றிருக்க வழி கூறினர். இக்காலத்தினர் அரசியல், பொருளாதாரம் ஆகியவைகளின் மூலமே மனித சமூகத்தை இன்புறச் செய்யலாம் எனக் கூறுகின்றனர். முன்னேர் கூற்று அனுபவத்தில் பயன் அளிக்கவில்லை; பின்னேர் கூற்று கண்கண்ட உண்மை. இதற்கே இன்று உலகம் உழைக்கின்றது ஆதலின், அறிவுடையோர், ஆற்றலுடையோர், சமரச மனப்பான்மையுடையோர், முயன்ருல் உலகத்தையே இன்பமயமாக்கிவிட முடியும்.

துன்பத்தை மறக்க இன்பம் வேண்டும். இன்பத்தை ஆக்குவது மகிழ்ச்சி, உள்ளத்தில் தோன்றும் கவலையை மறந்தால் மகிழ்ச்சி தோன்றும். மகிழ்ச்சியின் முன், அதாவது சிரிப்பின் முன் எத்தகைய துன்பமும் தலைகாட்டாது. துன்பத்திற்கு மருந்து மகிழ்ச்சியைத் தவிர வேறில்லை.

இடுக்கண் வருங்கால் நகுக,
அதனை அடுத்து ஊர்வது
அஃது ஒப்பது இல்

என்றார் வள்ளுவர்.

"துன்பம் வந்தால் அதனைப் பொருட்படுத்தாதே. இந்த இழவுக்கு என்ன செய்வோம் என்று தலையில் கையை வைத்துக்கொண்டு கவலைப்படாதே. ஏ, துன்பமே! என்னிடமா வந்தாய்; பார் உன்னை மாண்டு மடியச்செய்கிறேன்! என்று கடகடவென்று சிரித்துவிடு. அதன்பின் வருவது இன்பம். அந்த இன்பத்திற்கு நிகர் எதையும் கூறமுடியாது." இது மேலே காட்டிய வள்ளுவர் வாய்மொழியின் கருத்து. ஆகவே, கவலையை மறப்பதற்கு முதல் வழி மகிழ்ச்சி, நகைப்பு, சிரிப்பு என்பது எவரும் மறுக்கமுடியாத உண்மை.

மகிழ்ச்சி பெற வழியென்ன? கேள்வி எளிது; எல்லோரும் கேட்கக்கூடியது; ஆனால் பதில் கூறுவதுதான் அரிது. வெவ்வேறு போக்கில் உள்ளவர்கள் மகிழ்ச்சிக்கு வெவ்வேறு வழிகளைக் கூறுவர். "ஆண்டவனைத் துதிப்பதே ஆராத இன்பம்" என்பர் கடவுள் பக்தர். நாடகம், சினிமா, சங்கீதம் மகிழ்ச்சியுடன் பொழுதுபோக்க ஏற்றவை என்பர் கலாரசிகர். காவியம் கற்போம்; ஓவியம் பார்ப்போம்; விளையாடுவோம்; நண்பர்களுடன் கூடி நகைச்சுவையுடன் பேசி மகிழ்வோம்; காதல் செய்வோம் என்பர் பலர். உண்டு, களித்து, உறங்குவதே சுகமென்பர் சோம்பேறிகள்.

குடித்து வெறிப்பதே சுகமென்பர் குடியர். ஆம், குடியில் மகிழ்ச்சியில்லையென்று எவரும் கூறமுடியாது. மதுவானது வயிற்றில் பாய்ந்தவுடன், மனக் கவலையை மாற்றுகிறது. உணர்ச்சியை ஊட்டுகின்றது. தன்னை மீறிய

மகிழ்ச்சி, களிப்பு தலைதூக்கி ஆடுகின்றது. களிப்பு என்னும் சொல்லே கள்ளிலிருந்து பிறந்தது. கள் என்னும் பகுதியே களிப்பு என்னும் சொல்லுக்குப் பிறப்பிடம். கள்ளுண்டு மகிழும் நிலைக்கே களிப்பென்னும் பெயர் சூட்டினர் முன்னோர்கள். கள் இன்றேல் பண்டைக் களிப்பென்னும் சொல் இல்லை.

பண்டை நாளில் மக்கள் வாழ்க்கையைக் களிப்புறச் செய்வதற்குக் கள் அவசியமாக இருந்தது. இக்காலத்தில் அது தேவையில்லை. கள்ளைக் காட்டிலும் களிப்புறச்செய்யும் பொருள்கள், நிகழ்ச்சிகள், செயல்கள் மலிந்துவிட்டன-

பாட்டு, நாடகம், படக்காட்சி, சிறுகதை, பேச்சு, பொது ஜன ஊழியம், சுதந்தரப் போராட்டம், விஞ்ஞான ஆராய்ச்சி, இலக்கியம் ஆகியவை கள்ளைக் காட்டினும் களிப்பூட்டுவன. இவற்றை இப்போது எல்லோரும் எளிதில் காணலாம்; நடத்தலாம்; அனுபவிக்கலாம். இவைகள் பண்டைக் காலத்தில் எல்லோர்க்கும் கிட்டாதவை. ஒருசிலர்க்கே கிடைத்தன. ஆதலின் எளிதில் கிடைக்கும் கள்ளைக் கொண்டு களிப்புறலாம் என நம்பினர்; நடந்தனர்.

பண்டைக் காலத்தில் தோன்றிய கவிதைகள், காவியங்கள், ஓவியங்கள், வீரத்தன்மை, வள்ளல்தன்மை எல்லாம் கள்ளின் மயக்கத்தால் பொங்கி வழிந்தவைகளே. நமது தமிழ் நாட்டுப் பெருநாவலர்களான கபிலர், அவ்வையார் முதலியவர்கள் இந்தச் சுவையில் ஊறினவர்கள்தான். வள்ளல்களும் களிமயக்குடன் பொருளை வாரி வாரி இறைத்தவர்களே. அக்காலத்தில் உலக முழுவதும் இந்த நிலையில்தான் இருந்திருக்கவேண்டும். இதில் ஐயமில்லை.

## 6

"காலப்பறவை தங்காது; சிறகை விரித்துக்கொண்டு பறந்துபோய்விடும். பறக்கும் சமயம் நெருங்கிவிட்டது. விரைவில் மதுவுண்டு மகிழ்ச்சிகொள்."

" மதுவருந்துதல் பாவம் அல்ல. அதுவும் ஆண்டவன் படைத்த பொருள்களில் ஒன்று. தீமையானவற்றை ஆண்டவன் படைக்கமாட்டான்."

" கொடி நிழல், ரொட்டித் துண்டு, சுவையுள்ள திராட்சை ரசம், இனிய பாடல், பெண்ணின் சங்கீதம் இவையே எனக்கு இன்பம். "

என்பன போன்ற கருத்துக்களை உள்ளத்திலிருந்து உதிர்த்திருக்கிருர் உமர்கய்யாம்.

ஏன் இந்தக் கருத்துக்கள் அவர் மனத்தில் தோன்றின? உலகம் நிலையற்றது ; மக்கள் வாழ்வு அழியக்கூடியது ; இன்று அழியுமோ, நாளை அழியுமோ, இரவில் அழியுமோ, பகலில் அழியுமோ, இப்பொழுது அழியுமோ, இன்னும் சிறிது நேரத்தில் அழியுமோ என்று உறுதிகூற முடியாதது. இவ்வெண்ணம் உமர்கய்யாம் மனத்தில் ஊன்றிநின்றது. ஆதலால் " வாழ்நாளை வீண்நாளாளாக்காதே ! இருக்கும் வரையிலும் மகிழ்ந்திரு. களித்திரு, கவலையற்றிரு, இறப்பது ஒன்றே உண்மை ! மற்றவைகள் மாயம். இறந்தபின் என்ன ஆவோம் என்பதும் தெரியாது !" என்றெல்லாம் மனித சமூகத்திற்குக் கூறினர்.

" வாழ்வாவது மாயம்,
மண்ணாவது திண்ணம் "

ஆகையால் முயற்சி வேண்டாம் ; ஊக்கம் வேண்டாம் ; உலக வாழ்வு வேண்டாம் ; கண்மூடி மவுனியாயிரு ; என்று சொல்வதைக் காட்டிலும், " இன்புற்று வாழ முயற்சிசெய் " என்று கூறுவது உயர்ந்த உபதேசம் அல்லவா ?

உமர்கய்யாம் ஒரு பாரசீகக் கவி. கவி மட்டிலும் அல்ல, சிறந்த வான சாஸ்திரி. வான சாஸ்திரக் கணக்குகளை முடிவுகட்டுதற்கான சிறந்த நூல் ஒன்றை இவர்

இயற்றியுள்ளார். பாரசீக மொழியில் கணிக்கப்பட்டுள்ள பஞ்சாங்கத்தில் பெரும் பங்கு இவருடையது.

மதுவைப்பற்றியே புகழ்கிருரே; நாக்கில் தண்ணீர் சொட்டும்படி எழுதியிருக்கிருரே: இவர் ஒரு நாஸ்திகரோ: என்று எண்ணிவிடவேண்டாம். கடவுள் நம்பிக்கையுடையவர்; முஸ்லிம்: குரான் பயின்றவர்; மத நூல்களில் தேர்ச்சியுடையவர்.

இவர் உண்மையாகவே மது தேவதைக்கு அடிமையாகியிருப்பாரா? அதைப் பணிந்து இன்புறும்படி உலகிற்குக் கூறியிருப்பாரா! என்று சந்தேகப்படுவோர் பலர். ஆம்! நாமும் இச்சந்தேகத்தை ஆதரிக்கிருேம். **பகுத்தறிவை, துன்பங்களைப் பொருட்படுத்தாத தன்மையை, உள்ளத்தில் சோர்வடையாத முயற்சியை, கவலைப்படாது மகிழ்ச்சியுடன் இருக்கும் தன்மையை, மதுவாக — அதாவது திராட்சை ரசமாக உருவகம் செய்திருக்கலாம்** என்பது அறிஞர் கருத்து. இதுவே உண்மையென நாமும் கொள்வோம்.

இவர் கி. பி. 11ம் நூற்றுண்டில் பாரசீகத்தில் வாழ்ந்தவர். இவர் பிறப்பிடம் நைசாப்பூர் என்பது. இவருடன் கல்வி பயின்ற தோழரே அக்காலத்தில் பாரசீக நாட்டு மந்திரியாயிருந்தார். அவர் தயவில் இவர் பெற்றது ஒரு சிறிய திராட்சைத் தோட்டம். அதிலேயே வாழ்ந்து வந்தார். ஆடம்பரமற்ற வாழ்க்கை. தத்துவ நூல், வான நூல் ஆராய்ச்சி, இவைகளே அவருடைய பொழுதுபோக்கு. இவர் மறைந்த காலம் 1123 என்பர்.

அவர் பாடிய பாடல்களுக்கு 'ரூபயாத்' என்று பெயர். எத்தனை பாடல்கள் அவரால் இயற்றப்பட்டன என்பது எவருக்கும் முடிவாகத் தெரியாது.

உமர்கய்யாம் காலத்தில் அவர் பாடலுக்கு மதிப்பில்லை. அவருக்கும் பொதுஜனங்களிடம் செல்வாக்கில்லை. மதப் பற்றுடையவர்களும், பொதுமக்களும், உமர்கய்யாமைத்

தூற்றினர்; குடிவெறியர் எனப் பழித்தனர். புரட்சிகர மான கருத்துக்களை வெளியிடுபவர்களுக்குக் கிடைக்கும் பரிசு என்ன? அதுதான் அவருக்கும் கிடைத்துவந்தது. இதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை.

## 8

உமர்கய்யாமின் ரூபயாத் மாசுபடிந்த மாணிக்கங்க ளாகக் கிடந்தன. அவைகளைக் கழுவியெடுத்தவர் **எட்வர்ட் பிட்ஜெரால்ட்** என்பவர். இவரே பாரசீக மொழியிலிருந்து ஆங்கிலத்தில் அவரது பாடல்களைச் சுவை துளும்ப மொழி பெயர்த்தார். 1809-ம் ஆண்டில் 75 பாடல்கள் வெளிவந்தன. மீண்டும் 1883-ம் ஆண்டில் இரண்டாவது மொழிபெயர்ப் பாக 110 பாடல்கள் வெளிவந்தன. இரண்டு மொழி பெயர்ப்புக்களுக்கும் சிறிது வேறுபாடு உண்டு.

எட்வர்ட் பிட்ஜெரால்டின் மொழிபெயர்ப்பே உலகுக்கு உமர்கய்யாமை அறிமுகம் செய்துவைத்தது.

அன்று இகழப்பட்ட அவர், இன்று உலகந்தாரால் தத்துவ ஞானியாகப் புகழப்படுகிறார். இலக்கியத்தில் இன்புறுவோரும் இவர் பாடல்களைப் பாராட்டுகின்றனர். வேதாந்திகளும் இவர் கருத்தைப் போற்றுகின்றனர்.

## 9

இத்தகைய சிறந்த நூலைத் தமிழில் இரண்டு அறிஞர் கள் கவியாகப் புனைந்துள்ளனர். ஒருவர் பழந்தமிழ் மரபு கெடாது புதுத்தமிழ்ப் பாடல்கள் தரும் தேசிக விநாயகம் பிள்ளை; மற்றவர் உள்ளத்தில் தோன்றும் உணர்ச்சிகளை அள்ளித் தெளிக்கும் கவி ச. து. சுப்பிரமணிய யோகி, ஒரு முஸ்லிம் தோழரும், ஒரு இந்துத் தோழரும் சேர்ந்து உமர் கய்யாம் பாடல்களை வசனமாக எழுதியுள்ளனர். அவர்கள் பெயர் நினைவில் இல்லை.

இம்மூவர் உமர்கய்யாமின் கருத்தைப் பாடல்களாக வும், வசனமாகவும் வெளியிட்டிருக்க, நீயும் இம்முயற்சி யில் ஏன் ஈடுபட்டாய் எனக் கேட்கலாம். எனக்கு

அந்தப் பாடல்களின்மேல் — அந்தப் பாடல்களில் பொதிந்துள்ள கருத்துக்களின்மேல் உண்டான ஆசையே என்னையும் பாடத் தூண்டிற்று. இதுதான் எனது விடை.

நான் எழுதியுள்ள பாடல்களை உமர்கய்யாமின் பாடல்களின் நேர் மொழிபெயர்ப்பாகக் கொள்ளமுடியாது. சில நேர் மொழிபெயர்ப்பு; சில அவர் கருத்தை மனத்துட் கொண்டு எழுதியவை. இவ்வளவுதான் கூறமுடியும். அவர் கூறிய ஊர்களையும், பெயர்களையும் முற்றும் மாற்றியுள்ளேன்.

பாடல்கள் தெளிவாக — நினைத்த கருத்தை விளக்குவனவாக இருக்கவேண்டும் என்பது என் விருப்பம். முடிந்தவரையிலும், எளிய சொற்களில் இனிய ஓசை பொருந்தப் பாடல்கள் எழுதவேண்டும் என்பது பிற்காலத்தில் எனக்குத் தோன்றிய எண்ணம். இந்த எனது எண்ணத்தை இப்பாடல்கள் நிறைவேற்றி யிருக்கின்றனவா வென்பதை நான் எப்படி முடிவுகட்டுவது? இதைப் படிப்போர்தான் கூறவேண்டும்.

உமர்கய்யாமின் பாடல்கள் மூலம், மக்கள் உலக வாழ்வை இன்பமுடன் நடத்த ஊக்கங்கொள்ளவேண்டும் என்பதும் என் ஆசை.

மனிதன் இன்பம் அடையப் பிறந்தான். இன்பத்தை அனுபவிக்கவேண்டியது அவன் பிறப்புரிமை. இறந்தபின் இன்புறுதற்காக இப்பொழுது துன்புறுதற்கு அஞ்சக் கூடாது என்ற கொள்கை மாறவேண்டும்.

"இப்பிறவி தப்பினல் எப்பிறவி வாய்க்குமோ, அன்றி எதுவருமோ" என்பது உண்மை. இன்றே முயல்க! இப்பொழுதே முயல்க! எல்லோரும் இன்புற்றிருக்க முயல்க! இதற்கு உமர்கய்யாம் பாடல்கள் உணர்ச்சியூட்டுவதாக.

இங்ஙனம்,

சென்னை,
1—1—1946.

**சாமி - சிதம்பரன்.**

## பதிப்பாசிரியர் முன்னுரை

எனது கணவர் திரு. சாமி-சிதம்பரனார் இலக்கணம், இலக்கியம் முதலிய தமிழ் நூற்களை நன்கு பயின்று பட்டம் பெற்ற தமிழ்ப் பண்டிதர் ஆவார். அவருக்குப் பாக்கள் எழுதுவதிலும் பரிச்சயமுண்டு.

உமர்கய்யாம் இடம் அவருக்கு மதிப்புண்டு. துன்பம் நிறைந்த இவ்வுலகை இன்பமயமாக்கவேண்டும் என்பதில் அவர் உமர்கய்யாமுடன் ஒத்த கருத்துடையவர். இவ் வுலகை இன்பமயமாக்க என்ன செய்யவேண்டும் என்று உமர்கய்யாம் எங்கும் கூறவில்லை. ஆனால், திரு. சாமி-சிதம்பரனார் சமூக, அரசியல், பொருளாதார, கலாச்சாரப் புரட்சியினால் துன்பம் நிறைந்த இவ்வுலகை இன்பமயமாக்க முடியும் என்பதில் முடிந்த முடிபுடையவராய் இருந்தார்.

இந்நூல் உமர்கய்யாம் பாடலுக்கு ஒரு சரியான மொழி பெயர்ப்பு என்று கூறமுடியாது. ஆனால், மூலக் கருத்துக் களைத் தழுவி, தமிழ்ப் பண்பாட்டிற்கேற்ப அழகிய தமிழ்ப் பாவாகப் பாடப்பெற்றுள்ளது. இதன் முதற் பதிப்பு 1946ல் வெளிவந்தது. காகிதம் கிடைக்காத யுத்த நெருக்கடியில் கையால் செய்யப்பட்ட முரட்டுக் காகிதத்தில் அச்சிடப் பட்டது. இப்பொழுது இரண்டாம் பதிப்பு, புதிதாகச் சில படங்களுடன் ஒருசில மாறுதல்களோடு வெளியிட்டுள்ளேன். தமிழகம் எனது முயற்சிக்குப் பேராதரவு தரும் என்று நம்புகிறேன்.

"இலக்கிய நிலையம்"
சென்னை-24
1—11—63

சிவகாமி-சிதம்பரனார்.



பாரசீகப் பாவலரும்

பழம்பெரும் தத்துவ ஞானியுமான

**உயர்திரு. உமர்கய்யாம் அவர்கள்**

# சிறப்புரை

1. உமர்கய்யாம் எனும் பெரியோன்
பாரசிக மொழிப் புலவன்
உலகநிலை ஆய்ந்த தூயன்
அமரஉளம் வாய்ந்திட் டோன்
ஆனந்த மாய் மக்கள்
வாழவழி அறிந்த வள்ளல்
கமகமென மணம் வீசும்
வாடாத மலர்கள் எனக்
கவிமலர்கள் உதிர்த்து வைத்தான்
"எமதுளத்தை மகிழ் விக்கும்
இவைகளென்ன" எல்லோரும்
எடுத்தழகாய் அணிந்து நின்றார்.

2. அவன் சொரிந்த மலர்களிலே
இனியசுவை மதுபானம்
அளவின்றி நிரம்பி நிற்கும்;
நவநவமாம் கற்பனைகள்
நடமாடும்; குடிப்பவர்கள்
உள்ளமெலாம் கொள்ளை கொள்ளும்;
சுவையறிவுப் பாடல்களுள்
அவன் பொதிந்த சோதிமணி
தேடியெடுத்த தடையும் மாந்தர்
எவருக்கும் மேலான
பேரறிஞர்; இன்பமெனும்
மங்கையினை மணந்தோர் ஆவார்.



தமிழ் இலக்கிய மேதையும், கவிஞருமான

திரு. சாமி-சிதம்பரனுர்

# உமர்கய்யாம் பாடல்கள்

## (ரூபயாத்)

1. *உறங்காதே! விழித்தெழுவாய்;*
*மாறிவரும் புதுவுலகில்*
*உனதறிவு விழியைவைப்பாய்!*
*நிறைந்தஒளிச் சூரியனும்*
*நீலநிறக் கடல்மீது*
*பொன்பூசி நிமிர்ந்து தோன்றிக்*
*கறையிருளில் மினுமினுத்த*
*விண்மீன்கள் ஒளி மழுங்கக்*
*கதிர்வீசிக் கிழக்கே வந்தான்;*
*சிறந்ததமிழ்க் கரிகாலன்**
*அரண்மனையின் சிகரத்தே*
*தன்கிரணம் சிந்தினனே.*

* பாரத நாட்டில் பலவிடங்களிலும் தன் புயவலிமையால் வெற்றிக்கொடி நாட்டிய சோழ மன்னன் கரிகாலன்.

2. இருள் அழியுமுன், போலி
மனக்கோட்டை உருமாறி
இறந்தது;பின் அறிந்தேன் ஒன்றே;
பெரியதொரு சத்திரத்தின்
உள்ளிருந்து பேசியதோர்
குரலின்மொழி உண்மை கேட்பீர்!
"அரிய எல்லா ஏற்பாடும்
கோயிலினுள் ஆனபின்னர்
துயில்மயக்கம் உள்ள அன்பன்
வெறுவெளியில் ஏன் இன்னும்
வீணைக் காலத்தைக்
கழிக்கின்றான்" என்றது தவே.

3. கதிர்காணச் சிறைக்கோழி
களிப்புடனே கூவுங்கால்
சத்திரத்தின் முன்னே நின்றோர்,
"இதுபொழுதே திறகதவை,
உள்நாங்கள் எத்துணைநாள்
இருந்திடுவோம் எனும் கணக்கும்,
புதிதாக ஒருதடவை
புகுந்தவர்கள் மீளல்இலை
என்பதும்,நீ அறிந்த உண்மை.
அதிசயம்ஈது அன்று"என்றே
இடியிடித்தார். இதுகேட்க
ஆதவனும் கிழக்கில் வந்தான்.

4. புத்தாண்டும் பிறந்ததுவே,
போய்மறந்த பலநினைவும்
புதிதாக மனத்தில் ஊறக்
கத்துகடல் அமைதியைப் போல்
கவலையிலா நிலைசேரும்
வழிகுறுகி நிற்கின் றேமால்,
இத்தரையில் வாழுயிர்கள்
மேலெல்லாம் இன்பமுறக்
கைவைத்தாள் அமைதி நங்கை,
உத்தமநாள் வந்ததென
உளமகிழ்ந்து மூச்சுயிர்த்தாள்
நமதன்னை உலக தேவி..

கனகசபை முட்கொடியின்
மெல்வாசச் செம்மலரைக்
கரம்பற்றி நழுவ விட்டான்,
மனங்களிக்கும் மருந்தாகும்
எனக்கருதி மாதேவன்
மதுக்கிண்ணத் தொடும றைந்தான்,
அனவரதம் ஒளிவீசும்
செம்மணிபோல் திராட்சை தரும்
அருங்கனிகள் இரசம் சிந்தும்,
நனிசெழிக்க மலர்ப்பொழில்கள்
பாத்திவழி நன்னீரும்
பாயும்இதை நாடிக் காண்பீர்.

6. மதிநிறைந்த கவிக்கம்பன்
வாய்மூடி மொழியின்றி
மவுனியாய் மறைந்து நின்ருன் :
புதியசுவைக் கவிரசமே !
கவிரசமே ! கவிரசமே !
எனஏங்கிப் புகலு கின்ற
அதிதெய்வப் பேரோசை
அடங்கவில்லை, அவன்புரந்த
தமிழ்த்தாயின் அடியில் வீழ்ந்தே
கதிநீயே ! எம்முளத்தைக்
கவிசெய்க ! என்றறிஞர்
கைகூப்பி வேண்டி நின்ருர்.

7. வசந்தமெனும் சுடர்நெருப்பில்
மழைகால வருத்தத்தை
வீசியெறி ! பழத்தின் சாறும்
கசந்ததெனும் மொழிமாதே
மதுக்கிண்ணம் கையேந்தி
கண்சிமிட்டி அருகில் வாநீ ;
விசைகொண்டு சிறகடித்துக்
காலப்புள் பறப்பதற்கு
வெகுநேரம் இன்னும் இல்லை ;
திசைநோக்கிப் பறக்கஅது
தொடங்கிற்றே ; தீந்தேனை
விரைவினிலே கிண்ணத் தூற்றே.

8. காதலுக்கு நீரூற்றும்
இவ்வசந்த காலத்தின்
ஒவ்வொருநாள் இரவின் முடிவும்
போதுஅலர்த்தி நறுமணத்தை
நல்கும்எனப் புகல்கின்றாய்,
முந்தைநாள் நிறைமலர்கள் எங்கே?
சீதமது நிறைமலர்கள்
சிறந்தமணம் நமக்களிக்கும்
இவ்வசந்த காலமே, நாம்
வேதனையாம் தீவிழ
நண்பரையும் நமதரிய
கிளைஞரையும் வீழ்த்தும் அன்றோ!

9. காலமெனும் அக்கொடியன்
நண்பரையும் கிளைஞரையும்
கவர்ந்துபோக! நமக்கவர் தம்மால்
ஞாலம்இதில் பயன் என்ன?
வாழ்ந்தாலும் வீழ்ந்தாலும்
நமக்கொன்றே; பெருங்குரல் கொண்டே
"ஏலாநீ போர்க்கெழுக"
எனப்பகைவன் எதிர்நின்று
கூக்குரல்இட் டார்த்திட் டாலும்
"பாலகனே உணவுண்ண
வருக"வெனப் பரிந்தன்னை
அழைத்தாலும் பொருளாக் கொள்ளேம்.

10. எண்ணரிய புகழ்மதுரை
வளநகரில் இருந்தாலென் ?
இடுகாட்டில் வாழ்ந்தால் என்ன ?
கிண்ணமுறை பழச்சாற்றில்
மிகவினிமை கிடந்தாலென் ?
கசப்புகுடி யிருந்தால் என்ன !
மண்ணுலகில் நமதுயிராம்
மதுரரசம் துளித்துளியாய்ச்
சிந்துவதும், நமது வாழ்க்கை
என்னுமொரு மரத்தின் இலை
ஒவ்வொன்ருய் விழுவதையும்
கண்டுமனத் தெண்ணு வீரே !

1. வாருங்கள் என்னுடனே,
வளங்கொழிக்கும் நாட்டினையும்,
முட்புதர்சேர் வனங்கள் தமையும்
வேறெனவும் பிரிக்கின்ற
நெடுவழியில் விரைவாகக்
கைவீசி நடந்து செல்வோம்·
ஊறுசெயும் அரசடிமை
இல்லாது மகிழ்ச்சியுடன்
அமைதிநிலை உலகு புகுவோம்;
ஏறும்அறக் கட்டிலிலே
இருந்தரசு புரிபுத்தன்
அருளாளன் பெயர் தழைக்கவே.

2. *வரிவண்டு மலர்தோறும்
தேன்ருந்திப் பண்பாடும்
வனத்தின்கண் செழித்து நிற்கும்
ஓருமரத்தின் பெருநிழலும்,
சுவையுணவும், கனிரசமும்,
உயர்புலவன் பாடல் நூலும்,
இருண்டகுழல் கிளிமொழியே!
நான்வேண்டும் சுகவாழ்வு;
பிறிதொன்றில் இன்பம் உண்டோ!
எரிந்தமனம் குளிர்ச்சிபெற
அருகிருப்பாய்! இசைபாடி
இன்பத்தேன் பாய்ச்சு வாயே!

* இப்பாட்டின் கருத்துக்களை அட்டைப் படம் விளக்குகிறது.

13. இவ்வுலகில் சிலபேர்கள்
பெருங்கீர்த்தி எய்தும்ஓர்
இச்சையுடன் செயல்கள் செய்வார் ;
திவ்வியம்சேர் புத்தர்பிரான்
அடைந்ததொரு பெரும் பேறு
தேடிவரல் வேண்டும் என்பார் ·
செவ்வையொடு சிறுமைகளும்
செறிந்தநில உலகே ! நான்
சேர்த்தபணம் முற்றும் கொள்வாய் !
எவ்வகையும் சுயநலத்தை
இனிவிரும்பேன், ஏமாறேல்
ஓசையிலே, எனது நண்பா.

14. மன்னுயிரின் உடலழிக்க
வலைபின்னி உயிர்வாழும்
மாபாவச் சிலந்தி போலே
இந்நிலத்தில் வாழுவது
மௌடீகர் இயல்பன்றோ ?
ஏன் இங்கன் வாழு கின்றோம் !
என்னபயன் ! உள்மூச்சு
வெளிமூச்சாய் எழுப்புமொரு
நிலைநம்மை அடையும் நேரம்
இன்னபொழு தெனஅறியோம்,
ஆர்ப்பாட்டம், அகங்காரம்,
வீண்உரைகள் இயம்பல் ஏனோ ?

15. கண்கவரும் வனப்பில் எமக்கு
இணையுண்டோ வெனக்கூறிக்,
கடிமணமும் சிறிது வீசி,
மண்மீது நமைச்சூழ்ந்து
மலர்ந்திருக்கும் வெளிர்சிவப்பு
மலர்கள் தரும் செடிகள் பாராய்!
எண்கொண்ட செம்பொன்நிறை
பைபிணித்த பட்டின் இழைக்
கயிறவிழ்ந்து நிலத்தில் வீழும்,
கிண்கிண்ணீர் எனப்பேசிப்
பணம்சிதறி மலர்வனத்தின்
கீழ்ஓடிக் கிடக்கும் அன்றே.

16. தங்கத்தைக் குவியல்களாய்த்
தானியம்போல் களஞ்சியத்தில்
கண்களிக்கச் சேர்த்து வைப்போர்
அங்கதனை மழைத்தாரை
எனஏழை மாந்தர்கரம்
சொரிந்துமனம் மகிழ்ந்து நிற்போர்
இங்குலகில் ஒருபடித்தாய்
மண்ணோடு மண்ணாகி
இறக்கின்ற காட்சி காண்போம்;
எங்கவர்கள் எனத்தேடி
எடுப்பவர்கள் இவ்வுலகில்
எவர்உள்ளார் இயம்பு வீரே.

17. உலகின்ப நுகர்ச்சிகளை
நிலையெனவே மாந்தர் குலம்
உளங்கொண்டு மிகவும் நம்பி
அளவில்லாக் காதல்அவை
மேல்வைத்து மகிழ்கின்றார்,
அதுமுடிவில் சாம்ப லாகும்.
பலமாகிச் செழித்தாலும்
நிலைப்பதில்லை ; பாலைவனப்
பனிபோலச் சிறிது போதில்
நிலையழிந்து மறையும், இந்தச்
செய்தியினை நீலவிழிக்
கருங்குயிலே நினைத்துப் பார்நீ !

18. காதலர்க்கு மகிழ்வூட்டும்
கருங்குயில்கள் குடியிருந்து
கூவும்மலர்ச் சோலை, பின்னர்
ஈதெனக்கண் டறிவதற்கோர்
சுவடின்றி மணல்வெளியாய்
எரிந்துபாழ் ஆகும், இந்தப்
பூதலத்தில், இரவுபகல்
முறைமாறி வருவனபோல்,
புகழ்கொண்டு வாழ்ந்த மன்னர்
சாதல்எனும் இருள்உலக
வழிநோக்கி முன்பின்னே
சார்ந்ததிறம் அறிந்து நின்றோம்.

19. நாற்றிசையும் ஜெயக்கொடிகள்
நிலைநாட்டி, நங்கையரின்
விழிவேலுக் குடைந்து வாழ்ந்த
ஏற்றமிகும் இராவணனூர்
வாழ்ந்தவிடம் புலிகிடக்கும்
தூறாகி இருந்த தன்றோ ;
கூற்றுவனும் நடுநடுங்கும்
கொடுவில்லன், இராகவனே
கொதிப்புரையோடு எழுப்பி னாலும்,
மாற்றம்எதிர் மொழியாத
பெருந்தூக்க நிலையடைந்தான்,
மன்னன்இனி விழித்தல் இல்லை.

20. தானேதான் இணையான
தமிழறிந்து வாழ்ந்த புகழ்க்
குலோத்துங்க சோழ மன்னன்
வானோங்கு கோபுரஞ்சேர்
மணிவாசல் பலமன்னர்
குழுக்கூடி வந்த காலை,
நான்நேரே கண்டதனை
நவில்கின்றேன் ; கூ கூ கூ
வெனக்கூவும் குயில்கள் கண்டேன் !
தேனேபோல் அக்குயில்கள்
கூகூகூஎனப் பேசும்
தீங்குரலை மீண்டும் கேட்டேன்.

21\. என்காதல் பயிர்வளர்க்க
இனியமொழி மழைசொரியும்
ஏந்திழையே காலம் தாழேல்!
முன்காலத் துயரினையும்,
மூண்டுவரும் எதிர்காலக்
கவலையையும் முழுது நீக்கும்,
இன்பாரும் மதுக்கிண்ணம்
அதைநிரப்பி, இப்பொழுதே
என்முன்னே கொணர்க நீதான்
அன்பாக நாளையென
அறைகின்ற மொழிமறக்க,
அறிவார்யார் நாளை நிலையே!

22\. மனதார நாம்அன்பு
வைத்திருந்த மாந்தர் சிலர்
மகிழ்வுறுநற் குணங்கள் உள்ளார்,
கனமான சுவைநிறைந்த
திராட்சைரசம் போன்ற அவர்
வாழ்க்கையினைக், காலத் தச்சன்
தனதான கருவியினால்
நறித்திட்டான் விரைவினிலே.
தரைமீதில் அவர்கள் எல்லாம்
இனமாக ஒருவர்பின்
ஒருவர்எழுந்து இளைப்பாற
மெதுவாக ஏகி விட்டார்.

23. அன்புடையார் விட்டுஅகன்ற
அறையிடத்தே, நாமெல்லாம்
அளவற்ற மகிழ்ச்சியுடனே,
இன்பமிகும் இளவேனிற்
காலத்திற் கேற்றபுது
ஆடையணி புனைந்து வாழ்வோம்.
நண்பரெலாம் நலிவெய்த
நாமொருநாள் நிலத்தின் கீழ்ப்
படுக்கைதனை நண்ணல் வேண்டும்.
துன்பமுடன் நாமேயோர்
அமளிதனை அமைக்கின்ற
தொல்லையையும் எய்தி நிற்போம்.

24. காதலினால் நிலையழிந்த
கோவலனார் உடலிரத்தக்
கறைபட்ட நிலத்தில், இந்தத்
தாதுகுசெவ் விதழ்ரோசா
தழைத்தோங்கும் அலது,பிற
தரையிலே வளர்வதில்லை
ஈதெனது சிலசமய
நினைப்பாகும். இக்காவின்
புதர்உச்சி மலர்கள் எல்லாம்,
சீதமதி முகத்தொருத்தி
சிரமிருந்து செடிகளின்மேல்
சிந்துமென எண்ணு வேனே.

25. நம்மனதை வசமாக்கும்
நதியோரம் அசைந்தோங்கி
நங்கையரின் தோற்றம் காட்டும்
இம்மலரின் கொடிமீது
சாய்கின்றேம், இன்பமெனும்
குன்றின்மிசை ஏறிநிற்போம்.
அம்மாநீ! அதுவழுந்தச்
சாயாதே! மென்கொடிதான்
அழகுநிறை ஏந்த மாதின்
செம்மைநிறை உதட்டின்மேல்
செழிப்பாகப் பிறந்ததுவோ?
அறிவார்யார் அதன் சிறப்பே.

26. வெறியளிக்கும் மதுபானம்,
சுவைப்பாடல், இசைபாடும்
வித்தகர்கள் உயர்வு முற்றும்,
ஒருசிறிதும் நமைத்தொடராது
ஒழிந்துவிட, நாமொருநாள்
மண்ணுகி மடிதல் வேண்டும்;
பெருநிலத்தில் நமதுடலும்
பேதமற மறைகின்ற
நாள்அணுகு முன்னரே,நாம்
அரிதான காலத்தை
அமைதியுடன் மகிழ்வாக
நடத்தும்வகை அறிந்து கொள்வோம்.

27. இந்நாளே சிந்தனையின்
முடிவையெலாம் இயற்றிவிட
வேண்டுமென எண்ணு வோர்க்கும்,
பின்னளில் ஆகட்டும்
எனநினைந்து பேதமையால்
ஏமாற்றம் எய்து வோர்க்கும்
"உன்னுத மூடர்காள் '
இங்குமிலே அங்குமிலே
ஒருபயனும் உங்கட்கு" என்றே
மன்னுத கரியவிருட்
கோபுரத்தில் இருந்துவரும்
மனிதகுரல் ஒன்று கேட்டேன்.

28. கருங்கடல் மேல்சூரியனும்
ஒளிவீசி எழுங்காலைக்
"கடிமலர்கள் அவிழ்க" வென்னும்
ஒருகுரலைப் படுக்கைமேல்
கண்மூடி அமைதியுடன்
உறங்கும்போது உற்றுக் கேட்டேன்
"விரிந்தமலர் மீண்டிங்கு
மலர்வதிலை, சோர்வுற்று
விழும்"எனும் மென்மைஓசை,
மறுமுறைகண் விழித்தெழுந்த
பொழுதுஎனது செவிநுழைந்து
மறைந்ததனை நினைவு கூர்வேன்.

29. இரண்டுலக நிலைபற்றி
வழக்காடி இருந்தபெரும்
அறிஞர், தவம் முயன்றோர் எல்லாம்
மருண்டவர்கள், பெருமூடர்,
அவரும்இம் மண்ணுலகில்
வாழாமல் மறைந்து போனார்.
தெருண்டவர்கள் எனவிருந்து
தெளித்திட்ட அவர்சொற்கள்
தீதாகிச் சிதைந்த அன்றோ?
வறண்டபிணம் ஆகிஅவர்
வாய்முற்ற மண்நிரம்பி
வனமலர்போல் ஆயினரே!

30. என்னிளமைப் பருவத்தே,
இணையற்ற பேர்அறிஞர்,
இறைவன்அருள் பெற்றோர் என்பார்,
இன்னவர்கள் தமைக்கூடி
இச்சையுடன் அளவில்லா
அரும்பொருள்கள் இயம்பல் கேட்டேன்
அன்னவர்கள் உரைத்தவழி
அடைந்திலேன் ஒருசிறிதும்
அகத்து எழும்என் நினைப்பின்வழியே
பின்னரும்நான் நடக்கின்ற
பிடிவாதம் உடையஒரு
பெற்றிமையில் ஊறி நின்றேன்.

31. அறிஞருடன் நான்கூடி
ஞானவிதை தனையிந்த
அவனியிலே தெளித்து, மீண்டும்
பெரிதாகக் கரங்கொண்டு
நீர்ஊற்றி வளர்த்திட்ட
பின்னர்நான் அறுப்பு நாளில்
உரியபலன் பெற்றதனை
உரைக்கின்றேன், அதன் உண்மை
நிலையதனை உணர்ந்து கொள்வீர்.
விரைந்து,நீர் எனத்தோன்றிக்,
காற்றெனவே மறைந்திட்ட
விந்தைதான் கண்ட பலனே.

32. பள்ளத்தே நீர்பாயும்
பான்மைபோல், இங்கங்கே
பாய்ந்துநான் ஓடுகின்றேன் :
உள்ளத்தே, எதற்காக,
எங்கு,நான் செல்கின்றேன்
எனும்உண்மை உணர்தல் இல்லேன்.
கள்ளைக்கீழ் மலர்சிந்த
வீசிமறை காற்றேபோல்
காசினியை விட்டகல்வேன்
விள்ளத்தான் அறிந்திலேன்,
காற்றந்தப் புறந்தன்னில்
வீசுமோ உண்மை யாதோ ?

33. எங்கிருந்து, கேளாமல்
இவ்வுலகில் என்னையார்
இழுத்துவந்து புகுத்தி னரோ,
அங்கவரே எனைமீண்டும்
வினவாமல் எங்கேயோ
அறியாத இடத்தில் சேர்ப்பார்.
பொங்குபெரும் அன்புடைய
புனிதன்றன், நமைத்தூக்கிப்
போகும்அவர் செருக்கு தனையே
இங்குநினைப் பூட்டிவிட,
இனியசுவை பானத்தை
எமக்கென்று பரிசு தந்தார்.

34. இவ்வுலகில் வாழுயிர்கள்
மத்தியிலே யான்ஒருவன்
எவ்வகையோ வந்துதோன்றி,
எவ்வம்எனும் ஒருசிம்மா
தனத்தின்மேல் இருக்கின்றேன்,
இளைப்பாற நேரம் இல்லேன்;
தவ்வியெனைச் சூழ்ச்சிக்கல்
முடிச்சுபல வற்றினையும்
கண்டுஅவற்றை அவிழ்த் தெறிந்தே
செவ்வையாய் மக்கள் இயல்பு
என்னுமொரு முடிச்சைநான்
சிதைக்கும் வழிமட்டும் அறியேன்.

35. போகும்வழி மறைக்கின்ற
கதவொன்றை நான்கண்டேன்
பூட்டிற்குஓர் சாவி காணேன்,
ஏகுபுற வழியில்ஒரு
திரைதொங்கிற்று, அதனிடையே
ஏதும்நான் அறிய வில்லை.
வேகமுடன் நான்என்றும்
நீஎன்றும் வீண்சொற்கள்
உதிர்கின்ற விந்தை கேட்டேன்.
தேகம்இது நொடிவீழும்
நீயும்இலை, நானும்இலை,
எனும் உண்மை தெரிந்துகொண்டேன்.

36. நான்எங்கே, நீயெங்கே,
எனும்கேள்விக் கொருவிடையும்
ஞாலத்தே தோன்ற வில்லை.
வானத்தில்வாழ் சுவர்க்கம்
வளங்குலவு திரைக்கடல்தாம்
ஒருபதிலும் வழங்க வில்லை.
காணும்ஒரு குறியற்ற
கடவுள்தமை வணங்கிடினும்
கண்டறிய முடிவ தில்லை.
ஏன்அறிவு மயக்கந்தான்,
என்உடற்பை உள்ளேநான்
தேடுபொருள் இருக்கும் அன்றோ.

37. நீங்காது என் உடற்குள்ளே
குடியாகி நிற்கின்ற
நிகர்அற்ற அன்பின் உருவே!
தூங்காத பேருலகத்
திரையின்பின் இருந்து என்றும்
தொடர்ந்து தொழில் செய்துவருவோய்!
"ஏங்காமல் இருள் வழியைக்
கடக்கவொரு சுடர்விளக்கை
எனக்கருள்க" என்று கேட்டேன்.
ஆங்கார முடன் ஏதோ
"அறிவின் ஒளி குறைந்தது"என
அறைந்த விடை ஒன்றுகேட்டேன்.

38. சிற்றணுவின் திரள்சேர்ந்த
மண்பாண்ட உதட்டின்மேற்
சேர்ந்தேநான் சாய்ந்து நின்றேன்,
உற்றறிய வாழ்க்கையெனும்
கிணற்றுண்மை முழுவதையும்
உதட்டோடு என் உதடுவைத்தேன்,
"சற்றும்இனித் தாமதியேல்
சாகாத பொழுதேநீ
சலியாமல் குடித்து விடுவாய்,
அற்றுடலம் அழிந்ததன்பின்
மீண்டெழுதல் இல்லை"யென
மண்பாண்டம் அறைந்த தன்றே.

39. நான்சென்ற வழியின்கண்ணே
கண்டதொரு காட்சியினை
நவில்கின்றேன், குயவன் ஒருவன்
தான் கையில் ஈரமுள
மண்கொண்டு தட்டும்ஒலி
அதனைநான் நின்றுகேட்டேன்,
"ஏன்என்னை நையும்வகை
புடைக்கின்ருய் மெதுவாக,
மெதுவாக" எனவி ரந்தே
தேன்கொண்ட மழலைமொழி
தெளிக்கின்ற திறங்கண்டு
திகைப்போடு வழிநடந்தேன்

40. இவ்வண்ணம் நடுநடுங்கி
விடையளித்த, மண்பாண்டம்
இன்னுயிரோடு இருந்த நாளில்,
செவ்வண்ணம் கொண்டசுவை
மதுவருந்தி ஆனந்தம்
சிறந்திருந்து வாழ்ந்த தன்றே,
அவ்வண்ணம் மனம்பதிய
அப்பாண்ட உதட்டின்மேல்
அழுத்தியொரு முத்தம் வைத்தேன்
இவ்வண்ணம் முத்தங்கள்
பெறவும்,பின் கொடுக்கவும் நான்
இயல்புடையேன் என்பது அறிந்தேன்.

41. மண்ணாகி உயிர்களெலாம்
மடிவதுவும், மீண்டும் அவை
உயிராகி மலரும் விதமும்,
முன்னாளில் இருந்துவழி
வழியாக நடக்குமென
மொழிவதிலோர் கவலை யில்லை.
எண்ணாகி, எழுத்தாகி
இருக்குமொரு பரம்பொருள் இவ்
வுலகிலுறை அணுக்க ளாலே
மன்னாத மெய்பெற்ற
மாந்தர்குலம் படைப்பித்தான்,
என்னுமொரு மாற்றம் அறிவீர்.

42. காய்ந்துமடி புல்மீது,
கைக்கிண்ண மதுர ரசத்
துள்சிந்தக் கவிழ்க்க மாட்டோம்,
பாய்ந்துவரும் ஒருகண்ணின்
கோபத்தீ படுக்கும்வகை
அறியாது துளியுதிர்க் கலாம்-
தேய்ந்துவிட அறிவுதனைச்
செய்கின்ற தீயசினம்
தெரியாமல் உறையும் எங்கோ,
ஆய்ந்தறியின் விழியுளே
அதுநீண்ட நாளாக
அமைந்ததிறம் அறிந்தி லேன்நான்.

43. உலையாத சுவர்க்கத்தின்
சுகமொத்த சுவை மதுவை
உட்கொள்ளும் ஆவ லோடே
மலர்வனவே மணம் வீசும்
வனமலர்கள், மாந்தர்களும்
இவ்வெண்ணம் உடையர் ஆவார்.
நலமான மதுவற்ற
கிண்ணத்தைத் தலைகவிழ
நாட்டுவதே போல, வுன்னை
நிலைவான இடைவெளியில்
ஒருவன் தான் மூடிவிட
நினைப்பதனை விரும்பு வாயோ.

44. ஒருசிறிது காலந்தான்
உனக்கிந்த உலகத்தே
வாழ்வுள்ளது என்பதறிவாய்.
பெரியநிலத் தாய் உன்னை
கைநீட்டி எடுத்தேந்திப்
பிரியமுடன் அணைக்கு முன்னே,
வருகின்ற கவலையெலாம்
வறண்டுவிட மனத்துள்ளே
களிப்புமிக வளர்த்து நிற்பாய்.
கருதுசுவைத் திராட்சைதரும்
கனிகளையுன், கைக்கொண்டு,
கசக்கிமகிழ் வெய்து வாயே.

45. அருந்துசுவை மதுக்கிண்ணம்,
அதுபதியும் உன்னுதடும்
ஆனவிவை இரண்டு மேதான்,
பெருந்துயரம், நிறையின்பம்
இவையெல்லாம் பிறக்குமிடம்,
முடியுமிடம் ஆகி நிற்பின் ;
இரும்புவியில் இதுகாறும்
எவ்வகைநீ வாழ்ந்தாயோ
அவ்வகையே இன்னும் இங்கே
பொருந்தியுளன் என்றுநினை,
இதினின்றும் கீழ்நிலையில்
போவதிலை உண்மை இதுவே.

46. ‘பிறப்பேதும் யானறிந்தேன்
இறப்பதற்கென் செய்வென் எனப்
பேதமையால் வருந்தி நில்லேல்.
மறைப்பான இருள்அனைய
சுவைத்தெய்வம் மரங்கள் வளர்
நதியருகில் உன்னை நோக்கி,
இறப்பென்னும் மதுக்கிண்ணம்
ஈகின்றேன்’ எனவுன்றன்
இன்னுயிரை அழைக்கும் நாளில்,
சிறப்பென்று மனங்கருதிச்
செல்லுகநீ முன்னேறிச்,
சிறிதும்பின் அடைய வேண்டாம்.

47. வாழ்நாளின் கணக்கதுதான்
முடிந்ததன் பின் வனைந்தவனும்
என்செய்வான் என்று வாடேல்!
பாழாகும் நமைப்போன்ற
கணக்கில்லாக் குமிழிகளைப்
பரமன்தான் விளையாட் டென்னும்
ஆழ்சுவைசேர் மதுக்கிண்ணத்து
உண்டாக்கி ஆனந்தம்
அடைகின்றான், அதனை ஒத்தே
தாழாமல் மேன்மேலும்
செய்கிற்பான். தரையினிலே
உன்வாழ்வை இன்ப மாக்கே.

48. சாவென்னும் பெருந்திரையின்
அப்புறத்தே இருவேமும்
சார்வோம்,இவ் வுலக மட்டும்
மேவுமொரு தரமாக,
அழியாமல் வெகுகாலம்
நிலைத்திருக்கும் போது,நாமும்
பூவுலகில் வருவதையும்
போவதையும் குறிப்பாகப்
பார்த்திருப்பார் யாரே யுள்ளார்?
சாவதுவும் பிறப்பதுவும்
சாகரத்தின் மேலிட்ட
கல்லேபோல் ஆகும் அன்றே.

49. ஒருநொடியில் அழிவென்னும்
நெடுவனமும் ஒழிந்து விடும்,
அஃதேபோல் வாழ்க்கையென்னும்
சிறுகிணற்றின் சுவைநுகர்வும்
ஒருகணமே, சிந்தையிலே
இவ்வுண்மை வரைந்து வைப்பாய்
பெருநீல வான்வெளியில்
மீன்கணங்கள் பிரகாசம்
மறைந்தொழிதல் காணு கின்றோம்,
கருதியவை உடன்செய்வோம்,
தினம், கதிரோன் எழுவதையும்
விழுவதையும் கண்டு தேர்வீர்.

50. இவ்வுலகப் பெருமயக்கை
இன்பமென நினைந்தழியும்
ஏழைமதி யுடைய மக்காள்,
எவ்விதம்இப் பிறப்பிறப்பின்
இரகசியம்என் றுணர்ந்திடவே
நாள் கழிக்க எண்ணுவீரோ,
அவ்விதமேல் உடன்துணிக,
அறிந்திடுவீர், பொய்மெய்யைப்
பிரிப்பதொரு மயிரின் இழையே,
செவ்வையுற உலகநிலை
தேர்ந்தவர்கள் சிந்தித்துச்
செப்புமொழி இவைகள் தாமே.

51. துயரத்தின் எல்லைதனை
ஆண்மையுடன் கடந்தவர்கள்,
சேரும்இடம் தூய்மை யான
உயர்ந்தபெரும் இன்பநிலை;
உண்மையிதே உளங்கொள்வீர்,
பொய்மெய்யை உணரு வீரேல்
பெயராத பெருஞ்செல்வக்
குவியல்நிறை வீட்டினையும்,
பெருங்கருணை நிரம்பி நின்றே
அயராமல் முத்தொழிலை
விளையாட்டாய் அணிந்துறையும்
தலைவனையும் அடைந்து நிற்பீர்.

52. ஒருமாவே தனித்தனியே
பலவுருவாய்ச் சுவைநிறைந்த
உண்பண்டம் ஆதல் போலே,
இருநிலத்தே அணுச்சேர்ந்து
பலவடிவாய் இறுதியிலே
அழிந்துவிடும் இயல்பு காண்போம்
அருந்தலைவன், படைப்பின்வழி
பாதரசம் போல் விரைந்துன்
அல்லலினை அகற்றுகின்றான்.
ஒருபொழுதும் அவன்மட்டும்
அழியாமல் உலகமெலாம்
உறைகின்ற உண்மை அறிவீர்.

53. இப்பிறப்பின் முன்னிருந்த
இடம்இன்ன தென்றறியேன்,
அறிந்தவர்கள் எவரும் இல்லை,
எப்படியோ இவ்வுலக
நாடகமாம் இருள்நடுவில்
எனைப்புகுத்தி ஆட வைத்தான்,
உப்புடைய கடல்நீரை
உண்ணீராய் ஆக்குமவன்
விளையாட்டுக் கெல்லை உண்டோ!
ஒப்பரிய அவன்செயலை
உணர்ந்தவரும் உரைப்பவரும்
உலகில்எவர் கூறுவீரே.

54. கீழிடத்தில் அசையாத
நிலந்தொடங்கி மேலிடத்தே
கிஞ்சித்தும் திறக்க ஒண்ணாத்
தாழ்உடைய கதவுவரை
ஒருவகையாய் நீவிழித்துக்
கூர்மையுடன் பார்ப்ப தாலே
சூழுமொரு பயனில்லை
எனில், நாளைப் பயனடைவது
எவ்வண்ணம் சொல்க, நீதான்.
வாழுவதும் நிச்சயமோ
நாளைக்கிவ் வுலகினிலே,
வாடியுதிர் மலர்கள் காண்பீர்!

55. மனிதர்குணம் என்பதையும்,
மாண்புமிகும் தெய்வீகத்
தன்மையையும் எந்த நாளும்
இனியவென நம்பாதே!
நாளைவரும் இன்னலினை
எண்ணிமனக் கவலை கொள்ளேல்!
நனிநம்பி நாளையினை,
நடுப்பகலில் மணல் வெளியில்
நீர்தோன்றி நிற்றல் போன்று
புனிதமிலா உலகின்பப்
பெரும்புதருள் நீமறைந்து
நிலையழிந்து புலம்பி நில்லேல்.

56. பயனளியா முயற்சிகளில்,
பலதுயருக் குள்ளாகும்
வம்புகளில் பாய்ந்து, நீயுன்
உயரியதோர் காலத்தை
வீணாக்கேல்! உண்மைகளைப்,
பொய்மைகளை உணர்ந்து காண்பாய்,
நயமில்லாக் கசப்பான
பழம்தின்றே, அலதொன்றும்
உண்ணுதோ நலிவு கொள்ளேல்!
வியன்சுவைகொள் திராட்சை தரும்
கனியருந்தி களிப்பென்னும்
விரிகடலில் மூழ்கு வாயே.

57. என்னில்லத் திருந்துபல
விவாதங்கள் நடத்துவேன்
என்றுரைகள் புகன்றது அறிவீர்,
முன்னுள்ள இவ்வுலக
போகமெனும் என்மனைவி
முழுமலடி யாகி விட்டாள்,
இன்னுமிவள் தருமின்பம்
ஏதுமிலை எனக்கருதி,
ஏகென்று தள்ளி, மதுவாம்
கன்னிஉயர் சுவைமகளைக்
கடிமணமே செய்துள்ளேன்,
களிப்புஇதன் மேலும் உண்டோ.

58. உண்டுஇல்லை, தாழ்வு, உயர்வே,
என்றுபுகல் தத்துவநூல்
ஆராய்ச்சி உரைகளை, நான்
கண்டித்தும் மெய்ப்பித்தும்
கட்டுரைகள் மொழிந்திட்டேன் ;
ஆயினுமென் கவனம் எல்லாம்
அன்டினதே ஒன்றன்மேல்,
அதைமறிக்கும் வழியறியேன்,
அச்செய்தி கூறுகின்றேன்,
பண்டென்றும் அறியாத
இன்பமெனும் கடல் சேர்க்கும்
பழம்பிழிந்த ரசந்தான் அதுவே.

59. "ஆண்டனைத்தும் மக்கள்குல
வாழ்வுநிலை காணற்கே
அறிவெல்லாம் செலவு செய்வான்
ஈண்டு" எனவே எனைப்பற்றி
மாந்தர்பலர் மொழிகின்றார்,
இதுவுண்மை யாகு மாயின்,
மாண்டொழிந்த நேற்றினையும்
பிறவாத நாளையையும்
மக்கள்குலம் நினைவுகூர
வேண்டாமே, பஞ்சாங்கம்
தனில்இன்றி அவைகள்தமை
விலக்கிவிடல் நன்மை யன்றோ ?

60. செங்கதிரோன் புவிமீது
பொற்கிரணம் சிந்துமொரு
மாலையினில், தேவ தூதன்
பொங்குபெரு வியப்பெய்த
புயமீதில் ஒருபாண்டம்
சுமந்துமனை தோன்றி நின்றான்,
அங்கவனும் தன் கலத்தில்
உள்ளபொருள் அருந்திருசி
அறியவெனை இரந்தழைத்தான்,
மங்கலிலாச் சுவைப்பண்டம்
யாதென்னில் இன்பதரு
மனத்தில்வளர் மதுர ரசமே.

61. உண்மையெலாம் அறிகின்ற
திறமிந்த உலகத்தே
உயர்திராட்சை ரசத்தில் உண்டு,
திண்மையிலாத் தத்துவங்கள்
எவையேனும் அவைமுற்றும்
தீய்ந்தழியச் சிதைக்கு மதுவே,
நன்மையிலா ஈயமெனும்
நமதுதுயர் வாழ்க்கையினை
நலமாக விரைவில் மாற்றி,
பொன்மைபெறச் செய்யுமொரு
புதுவலிமைக் கருவியென
மதுவினையான் போற்றுவேனே.

62. இறைவன்ஏன் இவ்வுலகில்
திராட்சைரசம் உண்டாக்கி
இனியசுவை அதனுள் வைத்தான்,
வெறுப்படைதற் குரியஇழி
வழக்கங்கள் பிடிக்கவென
விரித்தவலை யல்லஅதுவே,
பெரிதுநமக் காசிமொழி
வழங்குமதன் பயன்கொண்டு
பேரின்ப மெய்தல் வேண்டும்,
வறிதுநமைச் சபிக்கவொரு
பொருளினையும் கடவுள்தான்
வையகத்திற் படைக்க வெண்ணுன்.

63. வாழ்வினிலே இன்பம்செய்
மருந்திணைநம் மனத்துள்ளே
உறுதியுடன் வைத்தல் வேண்டும்.
சூழ்வதுதான் ஏதுவெனினும்
பரிசுத்த பானத்தைச்
சுகமெனவே நம்ப வேண்டும்.
தாழ்வுதனை யழிக்கின்ற
திராட்சைரசச் சுவைபானம்
தங்கியதோர் கிண்ணம் இங்கே
பாழ்பட்டு மண்ணுகி
மடிந்துவிடும், அந்தோநாம்
பயன்பெற்று வாழ்தல் நன்றே.

64. ஆண்டவனே யேபோற்றும்
திறலுடைய மாமூதும்
அரியசுவை மதுவின் முன்னே
நீண்டதனது உடைவாளைக்
கரங்கொண்டு, சுழற்காற்றை
நிகர்க்கும்இது வெள்ள வீசி,
பூண்டதனது ஆருயிரைப்
பிணிக்குமொரு நம்பிக்கை,
பொருந்துதுயர், அச்சம் இவைதாம்
ஈண்டுநிலை பெருதபடி .
சிதறும்வகை செய்கின்ற,
இயல்புதனை உணர்ந்து கொள்வீர் !

65. இனிமைதரு திராட்சைசுவைக்
கனிபழுத்த பசுங்கொடியும்,
எந்நாளும் உண்மை பேசும்
புனிதகுண மாந்தர்களும்
இல்லாத சுவர்க்கத்தில்
போகந்தான் உண்டோ சொல்வீர்,
மனிதர்மனம் கவர்கின்ற
மற்றபல பண்டங்கள்
மதுவைப்போல் இன்பம் சுரக்குமோ!
துனிதருமே, அங்கய்யின்
குவிப்பினிலே தோன்றிநிலை
சூன்யத்தை நிகர்க்கும் அதுவே.

66. நரகம்என நடுக்கமுறும்
பயமேகேள்! மோட்சமென
நம்புமொரு மனமே நீகேள்!
விரியுமலர் மறுமுறையும்
மலர்வதிலை, வீழ்ந்துவிடும்
வாடிநில மீதில் இங்கே.
வருமனித வாழ்க்கைநிலை
பெற்றதல, வற்றிவிடும்
மணல்வெளியில் பெய்த மழைபோல்
ஒருசிறிதும் பொய்அல்ல,
உறுதி, இந்த உண்மையினை
உணர்ந்தவரே ஞானி யாவார்.

67. எண்ணற்ற பெருமக்கள்
முன்னாளில் இருட்டான
கதவின்வழி கடந்து போனார்,
இன்னதென அதுபற்றி
இயம்புவதற் கெனமீண்டும்
எவர்வந்தார்? ஒருவர் இல்லை.
எண்ணில்இது வியப்பன்றோ
இவ்வுலகில் வேறு நமக்குப்
பயன்உள்ள வேலை உண்டோ?
அன்னவர்கள் சென்றவழி
பின்பற்றி நாம்காணக்
கிளம்புவதே இயற்கை ஆமே.

68. பண்டுறைந்த பரனடியார்,
அறிவுடையோர் பகர்ந்தபல
பரிசுத்த மொழிகள் எல்லாம்
கண்டுணரின் வெறுங்கதைகள்;
மாந்தர்க்குள் கலகமெனும்
பயிர்வளர்க்கும் விதைகள் ஆகும்.
மண்டுபெருந் தூக்கத்தில்
இருந்தவர்கள் எழுந்தார்கள்,
மனத்தெழுந்த நினைவு சொன்னார்.
எண்டிசையும் அதிரஒலி
முழங்கிடினும் எழாதபெரும்
உறக்கத்தில் மீண்டும் உற்றார்.

69. இச்சையொடு, வெறுப்பு இவைகள்
சுற்றங்கொண் டெழுந்தபல
குணங்களெலாம், நனைந்த ஈரக்
கச்சையினில் படிகின்ற
புழுதியெனக் காதலுறும்
நம்முயிரிற் படிந்து நிற்கும்;
நிச்சயமாய் அவ்வழுக்கை
நீக்கியிங்கு நிர்வாண
நிலையுறலே சுவர்க்கம் ஆகும்.
நச்சியினி மண்ணுலகில்
வாழ்வதுதான் நாணமுறும்
வாழ்வன்றோ நவிலப் போனால்.

70. சிறிதுநாள் இங்கு உறைவதற்குச்
செய்ததொரு கூடாரம்
இவ்வுடலே என்று தேர்வீர்,
ஒருமகிபன் மரணம் எனும்
உலகடைவான், உடனிங்கே
மறுமன்னன் வந்து சேர்வான்.
இருளினிலே அன்னவனும்
அடித்து அகற்றப் படுகின்றான்
இருந்தவிடம் அறிதற் கின்றி
மறைந்தபொழுது உடன் மூன்றும்
மன்னவனும் மகிழ்ந்துறைதற்கு
ஆனசெயல் மக்கள் செய்வார்.

71. இறந்ததன் பின் உள்ளநிலை
என்னவெனும் செய்திமிக
மறைவாக இருப்பதாகும்.
மறையிருளில் என்னுயிரை
அனுப்பினேன் மாண்டதன்பின்
உள்ளநிலை யறிய வேண்டி;
திரும்பியது பலநாட்கள்
கழித்துவந்து தெரிவித்த
செய்தியிது வொன்றே யாகும்;
பெருமோட்சம், நரகம்எனப்
பேசும்வெறும் பேச்செல்லாம்
நானென்றே மொழிந்த தன்றே.

72. எண்ணுமொரு நினைப்பினிலே
வெற்றிதனை எய்திமனம்
இன்புறலே சுவர்க்கம் ஆகும்;
மண்ணில்உடல் தீப்பட்ட
உயிர்போல மனம்நொந்து
கலங்குவதே நரகம் ஆகும்
விண்ணகத்தே தனியுலகம்
பாதலத்தில் வேறுலகம்
என்றுகதை விளம்ப வேண்டாம்,
திண்ணம்இது பிறப்பெடுத்த
நாம்விரைவில் உலகத்தே
தீர்ந்தழிவோம் உண்மை இதுவே.

73. பலனின்றி அசைவரிசைப்
பொருள்களென உருக்கொண்டு
பாரில்நாம் வளர்ந்து நின்றோம்
இலகுபெரும் கண்காட்சிச்
சாலையினில் அதன் தலைவன்
இருள்அகல விளக்கை ஏற்றி
நிலவுபொருள் காட்டல்போல்,
நீள் உலகிற் கதிரவனை
நிமிர்த்திஒளி தோன்ற வைத்தான்.
உலகுதனில் அவ்வொளியில்
உதித்துமறை தோற்றங்கள்
நாமும்என உணர்ந்து கொள்வீர்!

புகல் கோடுள்ள
சதுரங்க உலகத்தே,
எள்அளவும் சக்தி யில்லா
சிறுதாயக் கட்டைகளால்
விளையாடல் சிலபண்ணி
அலைகின்றான் இங்கும் அங்கும்.
ஒருசமயம் அசைவின்றித்
தடைப்படுவான், இறுதியிலே
உயிர்எய்தி மாள்வன், பின்னும்
வரிசைபெற இவ்வகையே
மானிடர்கள் வந்துஉலகில்
மறைகின்றார் அறையின் உள்ளே.

75. பந்தது நான் இப்பக்கம்
அப்பக்கம் செல்வல் எனப்
பகர்வதுஒரு நாளும் இல்லை,
எந்தவிடம் ஆடுபவன்
குறிப்பில்வைத்து உதைப்பானே
எழும்பிவிழும் பந்தும் அங்கே.
இந்தவகை எவன் உன்னை
இவ்வுலக வெளிநோக்கி
எறிந்தனனே, அவனே உன்றன்
சொந்தநிலை நன்கறிவான்,
பிறர்அறியார் அவன் அன்றிச்,
சொல்லவினி ஏதும் இன்றே.

76. உளம்வெதும்பி நிறைகண்ணீர்
உதிர்த்திடினும், தலைவிதியில்
ஓர்எழுத்தும் அழிவ தில்லை.
துளங்குகரம் வரைந்துசெலும்,
வரைந்தபினும் தொடர்ந்தசையும்,
அசையாமல் நிற்றல் இல்லை.
விளம்புமன உறுதியினுல்
அலது,மிகு திறமையினுல்
விரைந்துகரம் பின்னிழுத்துக்
கிளர்ந்தவரி தனிற்பாதி
அழித்திடவும் ஒண்ணுது,
கிளிமொழியே உண்மை அறிவாய்.

77. உண்மையறி வுடையோரும்
கலைஞர்களும் விதிவிலக்கை
உபதேசம் செய்து வாழ்க!
திண்மையொரு சங்கிலியின்
தொடர்பினிலே சிக்குண்டு
திகைப்பவர்கள் அவர்கள் ஆவர்;
எண்மையினில் அதைவிட்டு
விலகிடவோ அன்றிஅதை
முறித்திடவோ முடிவதில்லை.
மண்ணுலகில் அதைத்தாண்டி
முன்னேறிச் சென்றிடவும்
மற்றவரால் ஆவ தில்லை.

78. வானம்என யாம்கூறும்
கவிழ்ந்தவொரு கிண்ணத்தின்
அடிப்பக்கம் அலைகடல்வாழ்
நானிலத்தில் எல்லோரும்
தவழ்ந்துறைந்து, முடிவினிலே
நம்ஆவி துறந்து விடுவோம்.
யான்உன்னைப் பணிகின்றேன்
எனக்கு அருள்க வெனக்கூறி
எடுத்துகரம் கூப்பிநில்லேல்,
நீனிறங்கொள் வானுநமைப்
போல்இங்கே வலுவின்றி
நின்றுசுழல் கின்றது அறிவீர்.

79. இந்நிலத்தே முதல்வந்த
மண்ணிடத்தில் இருந்துஇறுதி
மனிதஉரு இயற்றினர்கள்.
அந்நாளே அந்தத்தின்
அறுவடைக்காம் விதையினையும்
ஐயம்அற விதைத்து விட்டார்.
பின்னாளாம் முடிவினிலே
நாம்இந்தப் பேருலகில்
எவ்வண்ணம் உறைவதுஎன்று,
முன்னாளே படைப்பானது
உண்டான நேரத்தே
முடிவாக்கி விட்டதறிவீர்,

80. இன்றுவரும் அறிவினச்
செயல்,நேற்றை முயற்சியினல்
எழுந்ததொரு விளைவே ஆகும்.
நின்றுவரும் நாளைநமக்கு
அமைதியதோ, வெற்றியதோ,
நெஞ்சழிவோ, வருவதுஎதுவோ!
துன்றினைநீ எதற்காக?
எங்கிருந்து? துயர்உலகம்
தொலைத்தெழுதல் தான்எங்கு எதற்கே?
என்றறிய மாட்டாய்நீ
இனியசுவைத் தேன்அருந்தி
இவ்வுலகில் மகிழுவாயே.

81. பொறிஅமைக்கும் வல்லார்கள்
அமைத்தபொறி பழுதின்றி
இயங்குமொரு காலந் தன்னைக்
குறித்தெழுதி விடுவார்கள்.
அதுபோலக், குவலயத்தில்
எனைப்படைத்த நாளி லேயே,
திருத்தமுற இன்னபடி
இருக்க,வெனத் தீர்மான
மாய்எழுதி அனுப்பி விட்டான்.
ஒருத்தருமே அவன் இயல்பை
உணர்ந்தறியார், உலகினிலே
உளம்தேறி வாழ்க நீயே.

82. துறைபோய வல்லோர்கள்
மனம்போன படிசொல்லித்
தூற்றிடினும் கவலை யில்லை.
நிறைஇரசக் கனிக்கொடிதான்
எனைச்சூழ்ந்து நிற்பதனை
நேரேநான் கண்டு விட்டேன்.
அறிவுக்கண் திறவாத
அசடன்அவன் வெளிப்பக்கம்
வீண்ஊளை யிட்டு நிற்பான்
கறைபடிந்த இவ்வுலகில்
இருந்தறிவுக் கதவுக்கோர்
சாவியினைக் காண லாமே.

83. உண்மையெனும் விளக்கதன்மேல்
அன்புதனை ஊன்றிடினும்,
அன்றிஅதன் சுடரே என்னை
வன்மையுடன் எதிர்த்தாலும்,
அதன்வண்ணம் உள்ளத்தால்
வகுத்தறிதல் இல்லை யெனினும்,
சின்மை,புகழ், செறிந்தநில
உலகத்தே அதன்ஒளியைச்
சிறிதேனும் உணர்தல் நன்றே,
என்பதனை நான்முழுதும்
நன்றாக அறிந்துள்ளேன்,
இன்னலினை மறந்து வாழ்வேன்.

84. பயனற்ற செயல்களிலே
பாய்ந்திடினும், அவற்றுண்மை
என்மனதில் படிவ தில்லை,
உயர்ந்தமனச் சாட்சியெனும்
ஒளிதோன்றிச் "சேராதே
வீண்செயல்கள் ஊட்டும் மகிழ்வில்,
மயங்காதே, நஞ்சுபொதி
இனிமைகொள்ளேல்" என்றறையும்
மாற்றத்தை மதியா மக்கள்
தயவின்றித் தண்டனைகள்
பெறற்குரியர், தம்வினையின்
பயனைத்தாம் பெறுவர் அன்றே.

85. இளங்கன்றைப் போல்துள்ளி
எத்திசையும் திரிந்துவிளை
யாடமனத் துளங்ளி நின்றேன்;
உளம்குமுற, என்காலைப்
பற்றி, துயர் தரும்பொறிகள்
ஒளித்திட்டாய், வழிகள் தோறும்
களங்கமறக் குயில்கூவிக்
காதல்விதை தெளிக்கின்ற
தளிர்வனங்கள் வளரும் உலகில்,
விளங்காத விதியென்னைத்
தீயவழி நுழைத்ததெனை
விளம்புவதும் விந்தை யன்றோ.

86. பிரிந்துசிதை அழுக்கொண்டு
மனிதவுரு பிறப்பித்தாய்
பெருங்காதல் வளர்க்கும் தென்றல்
தரும்இனிய செடி, கொடிகள்,
மரஞ்செறியும் குளிர்சோலை,
வளர்த்துஅதிலே தவழ்ந்துசென்று
பெரும்படையும் நடுநடுங்கும்
படிசெய்யும் பாம்பினையும்
பிறப்பித்து வியப்புச் செய்தாய்,
எரியெனவே கொடுமைபுரி
மாந்தர்செயல் நின்செயலே,
இவர்தமைநீ வெறுத்தல் நன்றோ-

87. மண்ணுருவம் வனைகுயவன்
இல்லத்தே மறுபடியும்
தனியாகச் சென்று நின்றேன்,
கண்கவரும் கலங்களிடை
யிருந்தரிய ஒலியெழுந்து
வரக்கண்டு கண்ப தித்தேன்.
புண்ணாகி எரிந்தழிந்த
நாவின்தூள் துடிதுடித்துப்
புரளுவது தெரிந்தது ஆங்கே,
எண்ணமதை இழுக்கும்வகை
அதிலிருந்து வந்தமொழி
என்செவியில் நுழைந்த தன்றே.

88. ஒருபாண்டம் புகன்றமொழி
யிதுவாகும்; பயனின்றிப்
பாருலகில் இருந்து நானோர்
உருவாக்கப் படவில்லை,
என்னால்இவ் வுலகிற்கும்
உபயோகம் உண்டு மெய்யே
சிறுவடிவ மாய்என்னைச்
செய்தவனே சிந்தித்து
மீண்டும்எனை மண்ண கத்தே
மருவிவிடத் துகள் ஆக்கி
அனுப்புவனோ? இவ்வுண்மை
மனிதகுலம் அறியு மோதான்,

89. மற்றுமொரு மண்பாண்டம்
அதற்கெதிராய் மொழிந்ததொரு
மாற்றத்தை மகிழ்ந்து கேளீர்,
சற்றுமனம் சலிப்பின்றி
உல்லாச மாய்வாழக்
குடித்தசுவைக் கோப்பை தன்னை
முற்றுமிவன் முரடனெனப்
பெயர்பெற்ற வன்கூட
முறுக்கிவிட முனைய மாட்டான்,
பற்றுடனே செய்தவன்பின்
சினங்கொண்டு பாண்டங்கள்
பாழாக உடைக்க எண்ணுன்.

90. இதற்கான விடையொன்றும்
எழவில்லை, சின்னேர
அமைதியது செல்ல, ஆங்கே
ஒதுப்பான இடத்திருந்த
அழகற்ற உருவுடைய
ஒருபாண்டம் உரைத்தது இதுவே,
"புதிதாக எனைப்பார்க்கும்
எல்லோரும் நகைக்கின்ருர்,
புன்மொழிகள் புகலுகின்ருர்"
பதியான குயவனெனைப்
பண்ணுங்கால் அவன்கரங்கள்
நடுநடுங்கிப் பதிந்த தேயோ.

91. உயிர்அற்ற பொருள்களுடன்
அஃதுள்ள பொருள்கள் தமை
ஒப்பிடலாம் குற்ற மில்லை
பயனென்ன? உவமித்தல்
எதற்கென்று? பரிந்துசிலர்
கேட்டிடவும் கூடும் என்றே
சுயமாக யான்எண்ணும்
போதில்ஒரு மண்பாண்டம்
சுடச்சுடவே கேட்டது இதுவே :-
குயவன்யார்? பாண்டம்எவை?
தமைசெய்தே உண்மையினைக்
கூறுங்கள் உணர விங்கே!

92. அச்சமயம் ஒருபாண்டம்
புகன்றமொழி "அறியாத
மக்கள்பல அபத்தம் பேசி,
இச்சகத்தில் நரகமெனும்
கரிமனிதன் முகத்தப்பி
இருதயமே நடுங்க வைப்பார்;
நிச்சயமாய்க் கொடியபல
சோதனைகள் நமக்குலகில்
உண்டென்று நிகழ்த்தி நிற்பார்;
உச்சநிலை உறைதலைவன்
மிகநல்லன் எத்தொழிலும்
ஒழுங்காக முடியும் இங்கே"

93. இவ்வமயம் மற்றொன்று
கூறியநல் மாற்றமிது :—
"மிகநீண்ட காலமாக
கவ்வியதோர் மறதியினால்
காய்ந்துவரும் என்னுடலின்
மண்ணதனைக் கவர நிற்போர்
எவ்வகைய முயற்சிகளும்
செய்திடுக, எனைக்கனியின்
இரசத்தால் நிரப்பி வைப்பீர்,
இவ்வழியால் நாளடையில்
உயிர்பெற்று வாழ்வல்என
என்னெஞ்சில் எண்ணு கின்றேன்."

94. பாண்டங்கள் ஒன்றொடொன்று
இவ்வாறு பலபேசும்
போதுஅவைகள் தேடி நின்ற
நீண்டபிறைச் சந்திரனை
ஒருபாண்டம் கண்டவுடன்
உடல்உரசி குலுக்கி அவைகள்
'ஆண்டவனும் குயவன்றன்
முடிச்சவிழ்க்கும் அவ்வோசை
கீச்சென்னும் அண்ணே' என்ற
மீண்டவைகள் பேச்சில்லை,
யானுமவை மொழிகள்தமை
மிகநினைந்து திரும்பி வந்தேன்.

95. என்னுடலின் வெண்ணீறும்,
எனக்கின்பம் அளித்த சுவை
மதுபான போகம் தாமும்
விண்ணகத்தில் மறைந்திடுக,
விருப்பமுடன் நானொளிந்த
கல்லறையின் பாங்கர் அணுகும்
பன்னரிய அன்புடையார்
தமைமயக்கி அறியாமைப்
படுகுழியில் வீழ்த்த வேண்டாம்!
அன்னவரை அறிவின்வழிச்
செலவிடுவீர்! அவர்உண்மை
பொய்மைகளை அறிந்து கொள்வார்.

96. உலகுதனில் இதுகாறும்
நான்விரும்பி மகிழ்ந்திருந்த
உருவங்கள் எல்லாம் ஐயோ
நிலவுபுகழ் தனைஎனக்கு
மாந்தரிடை நல்காமல்
நிந்தனையே யளித்த தன்றி,
இலகுபெரு மாண்புதனை
ஆழமிலாக் கிண்ணத்தே
இருக்கும்வகை அமுக்கி, என்றன்
நலநிறைந்த கீர்த்தியினை
ஒருபாடல் நவிற்சிக்கே
விற்கும்வகை செய்த தன்றே.

97\. பாவங்கள் பொருட்டாகப்
பலகாலும் மனங்குழைவேன்,
உண்மையிது; பாசாங் கல்ல;
மேவினளோ சுயபுத்தி
யுடன்அங்கே யான்அறியேன்,
மீண்டெழுந்த நாளில் இந்தப்
பூவுலகில் பழிபாவம்
புரிவதிலை எனசத்யம்
புகல்கின்ற பொழுது பின்னர்,
தாவியதோர் வசந்தம் மனம்
சூழ்மலர்க ளுடன்வந்து
தவித்ததே என்கவலை தனையே

98. தன்வயமாய் எனை ஆக்கி
இவ்வுலகக் கவலையினைத்
தக்கணமே மறக்க வைக்கும்
இன்சுவைசேர் கனிரசத்தால்
என்பெருமை அங்கியினை
இழந்துரிமை மானம் விட்டேன்;
பொன்பெரிய தெனக்கருதிப்
பொருள்குவிக்கும் மதுவணிகர்
எல்லோரும் போட்டியிட்டே
முன்புகுந்து மதுவாங்கிச்
சேர்க்கின்றார்; இதுகண்டால்
மோகமுறா மனிதர் உண்டோ.

99. மணம்வீசி மகிழ்விக்கும்
மல்லிகையி னொடுவசந்த
காலமது மாறி விடுமே;
இனியநலம் பொருந்துபல
செயல்செய்யும் இளம்பருவம்
எழுத்தின்றி மறைந்து போகும்;
நனைமலர்கொள் செடிவாழ
எங்கிருந்து வந்ததெனை
நவிலரிய இளங்குயில்தான்
மனம்விரும்பு பண்ணோடு
மறையுமிடம் யார்அறிவார்;
மயக்கம்இதில் ஒன்று மில்லை.

100. கடுங்கோடை தாங்காமல்
கருகியபல் செடிகொடிகள்
கார்பொழியும் காலந் தன்னில்
விடுந்தளிரோடு எழுந்துவளர்
காட்சியென, வெயில்வாழும்
பாலைவன வழிநடப்போன்
கொடுந்துயர நடையினைப்பைச்
சிறியதொரு நீரூற்றின்
குறைவான தோற்ற மாங்கே
கெடும்படியே செய்துவிடும்,
நீரூற்றைக் கண்டவுடன்
கிளர்ச்சிமிக எய்தி விடுவான்.

101. உலகம்இது மறுமுறையும்
உண்டாக்க உடல்உறுதி
எனநம்ப ஏது உண்டேல்,
தலைவிதியின் சுவடியினை
வரைவோனை, அதைநல்ல
ஏடுதனில் தயவுசெய்தே
கலையாமல் எழுத"வெனக்
கெஞ்சிடலாம், பின்இந்தக்
காசினியில் நமது பேரை
நிலையாகச் செதுக்கிடவும்
அழித்திடவும் கூடும்,இது
நிசம்,உறுதி, பொய்யும் அன்றே.

102. படுகின்ற சிறுதுளிகள்
பலகூடிப் பெருவெள்ளம்
ஆகின்ற பான்மை போல;
அடுகின்ற துன்பங்கள்
ஆண்டுகளின் எண்ணேற
மிகஅதிகம் ஆகும்; அதனல்
கொடுமைநுகர் உயிர்ஒன்றைக்
குவலயமாம் கடிதத்தின்
சுருள்விட்டு நீக்கி விடுவீர்,
நடுநின்று விளைசெய்யும்
பெருங்கருணைக் கனிதருவே
நன்மையிது ஒன்றே ஆமே.

103. வாழ்க்கைக்கோர் உறுதுணையாய்
வந்தடைந்து மதுரமொழி
வழங்கிசுகம் அளிக்கும் மாதே!
தாழ்க்காமல் சாவென்னும்
விதிப்பாம்பைத் தலைதூக்க
விடாதடித்தல் வல்லேம் ஆயின்
பாழ்க்காமல் நாம்உலகில்
எத்தொழிலும் செய்திறமைப்
பண்புடையோம் ஆகி நிற்போம்;
காழ்க்கொண்ட நெஞ்சினராய்க்
களிப்பென்னும் தண்காவில்
கலந்துவிளை யாடி வாழ்வோம்.

104. காலமதைக் கடக்கவழி
யறியாமல் காற்றில்மணம்
போல்அதனில் கலந்துவிட்டோம்.
ஞாலமிதில் இருட்கறையை
நிலவென்னும் சுண்ணம்பு
நீற்றலே நன்கு பூசிச்,
சாலமகிழ் தருகின்ற
சந்திரனும் நடுநடுங்கி
மெதுவாகச் சலித்து வந்தான் ;
தூலமிலா நமைத்தேடி
வனம்புகுந்தான் ; இலை இலையாய்த்
துருவியுடல் தேய்கின்றனே.

105. அன்புடையார் விருந்துண்ணக்
களித்துசேரும் அழகுபடி
இடத்தில்வளர் பசும்புல் நுனிகள்
மின்மினுக்க நிலவூற்றி,
வெள்ளிக்கால் தரையூன்றி,
மெதுவாக நடக்கும் மதியே !
இன்பமிக் வளர்க்குமது
பானத்தை நீயருந்தி,
வெறுங்கிண்ணம் அதனை என்றன்
துன்பமெலாம் ஒழிந்தபுதை
குழிமீது கவிழ்த்துவிடு ;
துதிபாடி மகிழுவேனே.

தமிழ்ப் பேரறிஞர்

# திரு. சாமி - சிதம்பரனார்

## எழுதிய நூற்கள்



வெளியிட இருப்பவைகள் ;

1. நான்மணிக்கடிகை (பாட்டும் உரையும்)
2. பட்டினப்பாலை (ஆராய்ச்சி உரை)
3. குறுந்தொகைப் பெருஞ்செல்வம்
4. நற்றிணைக் காட்சிகள்
5. பழமொழி நானூறு
6. வடலூரார் கவி அமுதம்
7. இந்திர விழா
8 கற்பரசியார் நளாயினி - வெண்பா
9. பொது மொழியின் அவசியம்
10. தமிழர் வீரம்
11. சீவக சிந்தாமணி
12. அறிவுக் கொடி
13. சிதம்பரனார் சிந்தனைச் செய்யுள்



திருமதி. சிவகாமி - சிதம்பரனார்

இலக்கிய நிலையம்

9, சௌராஷ்டிர நகர் 7-வது தெரு

சென்னை - 24

தமிழறிஞர்

## திரு. சாமி-சிதம்பரனார் அவர்களின்

# பழந்தமிழ் ஆராய்ச்சி நூற்கள்

### ஆள்வார்கள் அருள்மொழி

(அருள்நெறித் தொடர் 1)

*தமிழர்கள் கண்ட இரு பெரும் திருநெறிகளில் ஒன்ருன வைணவ நெறியை வளர்த்த ஆள்வார் களின் அருள்மொழிகளில் அடங்கிய தத்துவங்களை, அவர்களின் அன்பு உள்ளத்தை, அருள் மனத்தை நன்கு சித்தரிக்கப்பட்டுள்ளது இந்நூலில். மேலும் தமிழ்ச் சுவையும் பக்திச் சுவையும் பொங்கி வழிகிறது. பக்கங்கள் 148.* **விலை ரூ. 2—50**

### தேவாரத் திருமொழிகள்

(அருள்நெறித் தொடர் 2)

*இந்நூலில், அப்பர்-சுந்தரர்-சம்பந்தர் ஆகியவர் களின் சிறந்த கருத்துக்கள் நன்கு எடுத்துக்காட்டப் பட்டுள்ளன. மக்கள் யாவரும் இன்புற்று வாழ அவர்கள் காட்டிய வழிகள் எவை என்று தெளிவு படுத்தியிருக்கிறது. அதோடு அவர்களிடம் மொழி வேற்றுமையில்லை; சாதிப்பித்து இல்லை என்பதை யும் தமிழையும் வடமொழியையும் நன்கு பயின்ற வர்கள் என்பதையும், தேவாரம் சிறந்த தமிழ் இலக் கியம் என்பதையும் ஆணித்தரமாக எடுத்துக் காட்டப்பட்டிருக்கிறது. பக்கம் 154.* **விலை ரூ. 2—50**

### சங்கப் புலவர் சன்மார்க்கம்

(அருள்நெறித் தொடர் 3)

*சங்கப் புலவர்கள் கூறும் அறங்கள், நீதிகள், நாடு, மொழி, இனம் ஆகிய வேற்றுமைகளைக் கடந்து எல்லோருக்கும் ஏற்றவைகளாக மிளிர்கின்றன என்பதைத் தக்க சான்றுகளுடன் மெய்ப்பிக்கப் பட்டுள்ளது இந்நூலில். பக்கங்கள் 152.*

**விலை ரூ. 2—50**

## மணிவாசகர் - மூலர் மணிமொழிகள்

(அருள்நெறித் தொடர் 4)

*இந்நூலில் மணிவாசகப் பெருமானின் தேனூறும் திருவாசகத்தில் பொதிந்து கிடக்கும் தத்துவ நுட்பங்களையும் திருமூலரின் அருள்வாக்கில் அடங்கிய அரும்பெரும் உண்மைகளையும் மிக விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது. பக்கங்கள் 144.*

**விலை ரூ. 2—50**

## அருணகிரியார் - குமரகுருபரர் அறிவுரைகள்

(அருள்நெறித் தொடர் 5)

*இந்நூலில் அருணகிரிநாதரின் நூலில் கண்ட அருள் ஒழுகும் கவிதைச் சிறப்பையும், சீர் திருத்தப் பற்றையும், பரத்தையர்களின் இழிசெயல்களையும் ஆசிரியர் எடுத்துக்காட்டியிருப்பதோடு குமரகுருபரரின் தமிழ்ப்பற்றையும் முருக பக்தியையும் எடுத்துக்காட்டியுள்ளார். தமிழ் அமுதும் பக்திச் சுவையும் நன்கு எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. நல்ல தாளில் கண்ணைக் கவரும் வண்ணம் அச்சிடப்பட்டுள்ளது. பக்கங்கள் 136.*

**விலை ரூ. 2—50**

## பட்டினத்தார் தாயுமானவர் பாடல் பெருமை

(அருள்நெறித் தொடர் 6)

*பட்டினத்தார், தாயுமானவர் என்னும் இரு பெரும் அறிஞர்களின் பாடல்கள் படிப்பதற்கும் பாடுவதற்கும் இனிமையானவை. அதனைப் பலர்க்கும் விளங்கும்வண்ணம் எளிய தமிழில் இருவரின் சமரச சன்மார்க்கப் போதனைகளையும் நன்கு எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. மக்கள் அனைவரும் ஒன்றுபட்டு சாந்தியும் சமாதானமும் பெற்று வாழ இவர்கள் பாடல்கள் வழிகாட்டுகின்றன என்பதை நன்கு எடுத்துக்காட்டப்பட்டிருக்கிறது. பக்கங்கள் 136.*

**விலை ரூ. 2—50**

## சித்தர்கள் கண்ட விஞ்ஞானம் — தத்துவம்
(மறு பதிப்பு)

*விஞ்ஞானம், மெய்ஞ்ஞானம் ஆகியவைகளைப்பற்றி 12 தமிழ்நாட்டுச் சித்தர்கள் கொண்ட கருத்துக்கள் இந்நூலில் விளக்கப்பட்டுள்ளன. இறுதியில் ஔவை குறளும் இடம்பெற்றுள்ளது. ஆசிரியரின் தெளிந்த புலமையில் உருவான இந்த நூல் நமது சித்தர்களின் கருத்துக்களையும் தத்துவங்களையும் நன்கு பிரதிபலிக்கிறது. பக்கங்கள் 180.*

(பரிசுப் பதிப்பு ரூ. 4—50) **விலை ரூ. 3—50**

## வள்ளுவர் வாழ்ந்த தமிழகம்

*இந்நூல் வள்ளுவப் பெருந்தகையின் போதனைகளை ஒருதலைப்பட்சமாக விமர்சனத்துக்கு உட்படுத்தாமல் முழுமையாக ஆராய்ந்து அறியும் வகையில் பல நூல்கள் வரவேண்டும் என்று எதிர்பார்க்கும் இன்றையத் தமிழகத்திற்கு ஒரு நல்ல விருந்தாகும். பேராசிரியர் சிதம்பரனூர் வாழையடி வாழையாக வந்த தமிழ்ப் புலவர் மரபின் வழித்தோன்றல் என்பதை இந்நூலில் ஆசிரியர் மெய்ப்பித்துள்ளார். 200 பக்கங்கள். இரண்டாம் பதிப்பு. (அச்சில்)*

## நாலடியார் (பாட்டும் உரையும்)

*சமண முனிவர்களால் இயற்றப்பட்ட இந்நூல் திருக்குறளோடு ஒன்றாக வைத்து மதிக்கப்படத் தக்கது. இந்நூல் அறம், பொருள், இன்பம் என்னும் முப்பால்களில் காணப்படும் உயரிய தூய கருத்துக்களையும் நீதிகளையும் நன்கு விளக்குகிறது. பக்கங்கள் 234.* **விலை ரூ. 3—50**

## புதுக்குறள்

*இந்நூல் போற்றுதற்குரிய அரிய அறிவியல் நூல். அறிவானது நல்வாழ்வாழ்க்கையை விளக்கும் அணையாத அழகிய கலை விளக்காக ஆசிரியர் கண்டுள்ளார். அறிவின் ஒளியால் என்றும் நம்மிடம் புதுக்குறள் பேசும் பெற்றிவாய்ந்தது. பக்கங்கள் 90.* **விலை ரூ. 1—50**

## பழந்தமிழர் வாழ்வும் வளர்ச்சியும்

*இந்நூல் பண்டையத் தமிழர்களின் சமயம், தெய்வ வழிபாடு, உணவு வகை, குலம், நம்பிக்கைகள், பெண் உரிமை, சமுதாயப் பணி, அறம், பண்பாடு முதலியவைகளைப்பற்றி தொல்காப்பியம், திருக்குறள், முல்லைப் பாட்டு, குறுந்தொகை, நற்றிணை, சிறுபாணாற்றுப்படை, அகநானூறு, புறநானூறு முதலிய பழந்தமிழ் இலக்கியங்களில் கண்ட உண்மைகளைக்கொண்டு தேனினும் இனிய தீந்தமிழில் தீட்டப்பட்டிருக்கிறது.*

*பக்கங்கள் 230. இரண்டாம் பதிப்பு.* (அச்சில்)

## கம்ப ராமாயணம் (தொகுப்பு)

*இராமாயணம், தமிழ் நாட்டு இலக்கிய மணிகளில் தலைசிறந்த மாணிக்கமாக மதிக்கப்படுகிறது. ஆசிரியர் சாமி சிதம்பரனார் கம்பனின் காவியத்தை நன்கு பயின்று ஆராய்ந்து தொகுத்துள்ளார். ஆசிரியர் 25 ஆண்டுகளாக உழைத்து இத்தொகுதியை உருவாக்கியுள்ளார்கள். ஒவ்வொரு பக்கத்திலும் அடியில் எளிமையும், தெளிவும் கூடிய சிறந்த நடையில் அரிய குறிப்புரையும் பொருள் முடிபுகளும் எழுதியுள்ளார். அருஞ்சொற்பொருள், கதைக் குறிப்புகள், தொடர்களுக்கு விளக்கம், பொருள் முடிபு, உவமை முதலிய அணி வகைகளை விளக்குதல், சிற்சில பாட பேதங்களை விளக்கும் சில சிறப்புகள் முதலியன சேர்க்கப்பட்டுள்ளன. இதில் 6 காண்டங்களும் அடங்கியது. நல்ல தாளும் அழகான முத்துப் போன்ற அச்சும், கெட்டியான முழுக் காலிக்கோ பைண்டும் இந்நூலை மேலும் அணிசெய்வதாகத் திகழ்கிறது. தமிழக முதல் அமைச்சர், பேராசிரியர்கள், எழுத்தாளர்கள், பத்திரிகைகள் முதலிய அனைவரின் பாராட்டலையும் பெற்றது.*

**விலை ரூ. 22—00**